ஸ்ரீ:

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.



# மதுரகவியாழ்வார் வைபவம்.

பாண்டியநாட்டிலே திருக்குருகூர் என்னும் ஆழ்வார்திருநகரிக்கு அருகிலுள்ள திருக்கோளூரிலே, துவாபரயுகத்தில், எட்டுலக்ஷத்து அறுபத்துமூவாயிரத்து எண்ணூற்றெழுபத்தொன்பதாவதான ஈச்வரவருஷத்தில் சித்திரை மாதத்தில் சித்திரை நக்ஷத்திரத்திலே கணசரான குமுதருடைய அம்சமும் கருடாழ்வானுடைய அம்சமுமாய் ஒருவர் அவதரித்தார். ஸூர்யோதயத்திற்கு முன் கிழக்கில் காணப்படுகின்ற அருணோதயம்போலப் பராங்குசர் உதிப்பதற்கு முன் தென்தேசத்தில் தோன்றிய இவர், வேதசாஸ்திரங்களை இளமையிலேயே பயின்று செவிக்கினிய செஞ்சொற்கவிகளைப் பாடவல்லவராய் அதனால் மதுரகவி என்று திருநாமம்பெற்று மெய்யுணர்வினால் அவாவற்று மஹாவிரக்தராய் விஷ்ணுபக்தி விஞ்சி யோகநிஷ்டையிலும் நேர்ந்து தீர்த்தயாத்திரை திவ்யதேச யாத்திரைகளிலே திருவுள்ளமுடையராய்ப் புறப்பட்டுச் சஞ்சரிக்கலுற்று வடநாட்டுத் திருப்பதிகளைச் சேவித்துக்கொண்டு திருவயோத்தியை அடைந்து, அங்கு அர்ச்சாவதாரரூபமாய் எழுந்தருளியிருக்கின்ற இராமபிரானையும் பிராட்டியையும் ஸேவித்துத் திருவடிதொழுது அந்தப் பரிசுத்தபூமியில் நித்ய வாஸஞ் செய்யக்கருதிச் சிலகாலம் வஸித்திருந்தார்.

அக்காலத்தில் ஒருநாளிரவில் இவர் திருக்கோளூரெம்பெருமானைத் திசை நோக்கித் தொழக்கருதித் தெற்குத்திக்கில் கண்செலுத்தியபொழுது, அப்பக்கத்திலே வானூறவளர்ந்து விளங்குகின்றதொரு திவ்யமான பேரொளியைக் கண்ணுற்று அது இன்னதென்றறியாமல் 'கிராமநகரங்கள் வேகின்றனவோ? காட்டுத்தீயோ?' என்று சங்கித்துத் திகைத்துநின்றார். நின்றவர், இங்ஙனமே

அடுத்த இரண்டு மூன்று நாள்களிலுங்கண்டு, அச்சுடர்த்திரள் முச்சுடரொளியிலும் மிக்கு விளங்கியதனால் வெகுவியப்புற்று, அதனை அருகிற்சென்று பார்த்துத் தெளியத் துணிந்து புறப்பட்டு, அச்சோதியையே குறியாகக்கொண்டு அதிவிரைவாக நெடுவழிகடந்து, நடந்துவந்து, ஆழ்வார்திருநகரியை அடைந்து, அதில் அவதரித்தருளியுள்ள சடகோபமுனிவரது திருமேனி விளக்கத்தைச் சேவித்து இதுவே அத்தனை நெடுந்தூரம் பிரகாசித்ததென்று அறிந்து வியந்து, அவ்வாழ்வாரது நிலைமை முன்பு தாம் கேள்வியுற்றிருந்தபடியே அப்ராக்ருதமாயிருக்கக்கண்டு, அவர்க்குக்கட்புலனும் வாய்ப்புலனும் உள்ளனவா வென்பதைச் சில உபாயங்களால் பரிசோதிப்பவரானார். அப்பொழுது காரிமாறப்பிரான் கண் திறந்து கடாக்ஷித்து, இவர் கேட்ட கேள்விக்கு ஏற்ற விடைசொல்லியருள, அதுகேட்டு மதுரகவியாழ்வார் அவரது ஞானவைபவத்துக்கு அதிசயித்து ஈடுபட்டு அவரையே ஆசாரியராகக்கொண்டு சரணம் புகுந்தனர்.

அப்பொழுது நம்மாழ்வார் பஞ்சஸம்ஸ்காரம் ப்ரஸாதித்து இவரை ஆட்கொண்டு, பரத்வம் வ்யூஹம் விபவம் அந்தர்யாமித்வம் என்னும் நான்குநிலைகளுக்கு முறையே வேதம் பாஞ்சராத்ரம் இதிஹாஸம் ஸ்ம்ருதி என்பனபோல அர்ச்சாவதாரத்திற்கு ஏற்ற ஆதிவடிவமான தமிழ்நூல்களை அருளிச்செய்யத் தொடங்கி, சதுர்வேதத்தின் ஸாரமாக நான்கு திவ்யப்ரபந்தங்களை அருளிச்செய்து, அவற்றை அம்மதுரகவிக்கு உபதேசித்தருளினர்.

'முந்தின மூன்றுயுகங்களில் த்யாந யாக அர்ச்சநங்களால்போலக் கடையுகத்தில் தோத்திரமாத்திரத்தால் உயர்கதி உளதாம்' என்று நூற்கொள்கைக்கு ஏற்ப மதுரகவிகள் தாம்உபதேசம்பெற்ற திவ்யப்ரபந்தங்களைக் கைத்தாளமெடுத்துப் பண்ணிசையோடு எப்பொழுதும் பாராயணஞ்செய்துகொண்டு திருக்குருகூர்நகர் நம்பிக்கு ப்ரதாந ஸிஷ்யராய், பரதாழ்வானுக்கே பணிவிடைபுரிந்தொழுகின சத்ருக்நாழ்வானைப்போலப் பகவத்பக்தியினும் பாகவதப்ராதிபத்தியையே பரமாநுஷ்டாநமாகத் தலைக்கொண்டு அவ்வாழ்வார் விஷயமாக '**கண்ணிநுண்சிறுத்தாம்பு**' என்ற திவ்யப்ரபந்தத்தைப்பாடி முமுக்ஷுக்களுக்கு உபகரித்தருளி வாழ்ந்திருக்கையில், தேவிற்சிறந்த திருமாற்குத்தக்க தெய்வக்கவிஞரும் பாவிற்சிறந்த திருவாய்மொழி பகர் பண்டிதருமான காரிமாறர் திருநாட்டை அலங்கரித்தார்.

அப்பால், ஆசிரியரைப் பிரிந்ததற்கு மிகஇரங்கி அரிதில் தேறிய மதுரகவிகள் அர்ச்சாரூபமான ஆழ்வார்விக்ரஹத்தை அத்திருநகரியில் ஏறியருளப்பண்ணிப் ப்ரதிஷ்டிப்பித்து அவர்க்கு நித்யநைமித்திக உத்ஸவங்களையெல்லாம் சிறப்புற நடத்திக்கொண்டுவந்தார். அத்திருவிழாக்களில், 'வேதந்தமிழ்செய்த மாறர் வந்தார்!; திருமாலுக்குரிய தெய்வப்புலவர் வந்தார்!; அளவிலாஞானத்து ஆசிரியர் வந்தார்!' என்று இவை முதலாக அனேக விருதுகளைக்கூறித் திருச்சின்னம் முழங்குதலைக் கேள்வியுற்றவளவிலே, மதுரைச்சங்கத்தாரது தூண்டுதலால் அவர்கள் மாணாக்கர்கள்வந்து எதிரிட்டு 'உங்களாழ்வார் பக்தரேயன்றிப் பகவா

னல்லரோ; இவர் சங்கமேறிய புலவரோ? இவர்பாடிய திருவாய்மொழி சங்கமேறிய செய்யுளன்றே; இவரை வேதந்தமிழ் செய்தவரென்று கொண்டாடுவது தகுதியோ?" என்று பலருந்தர்க்கம்பேசி விருதுகளைத் தடுத்திட்டனர். அதற்கு மதுரகவிகள் மனம் பொறாமல் வருந்தி 'இவர்கட்குக் கர்வபங்கமாம்படி தேவரீர் செய்தருளவேண்டு'மென்று ஆழ்வாரையே பிரார்த்திக்க, சடகோபர் ஒரு கிழப் பிராமணவடிவத்தோடு வந்து, 'திருவாய்மொழியில் "கண்ணன்கழலிணை நண்ணும் மனமுடையீர்! எண்ணுந் திருநாமம் திண்ணம் நாரணமே" என்ற பாசுரத்தின் முதலடியை ஒரு சிற்றேட்டில் எழுதிக்கொண்டுபோய்ச் சங்கப் பலகையில்வைத்திட்டால் அவர்கள் செருக்கு அடங்கும்' என்று கூறியருளினார். அந்த நியமனத்தின்படியே சடகோபபக்தர் கண்ணன்கழலிணையை எழுதிய ஏட்டை எடுத்துப்போய் வைத்திட்ட மாத்திரத்தில், சங்கப் புலவர்கள் ஏறியிருந்தபலகை பொற்றாமரைப் பொய்கையில் மூழ்கித் தன்மேலிருந்த புலவர்களையெல்லாம் நீரில்வீழ்த்தி உடனேமேலெழுந்து தன்மீது வைத்த சிறுமுறியை மாத்திரம் ஏந்திக்கொண்டு மிதந்தது. அப்பொழுது நீரில் விழுந்து அமிழ்ந்து தடுமாறியெழுந்து மெல்ல நீந்திக் கரைசேர்ந்த சங்கப்புலவர்கள், ஸகல வேத சாஸ்திரங்களையும் பிறரால் கற்பிக்கப்படாமல் தாமே யுணர்ந்த பகவதம்சமாகிய ஆழ்வாருடைய வைதிகமான பாண்டித்யத்தைத் தெரிந்துகொண்டு இறுமாப் பொழிந்து, தாம் முன்பு அபசாரப்பட்டதற்கு அநுதாபமுற்று, அதனை க்ஷமித்தற்பொருட்டு அவரது மஹிமையைக் குறித்துத் தோத்திரமாகத் தனித் தனி ஒவ்வொரு பாடல்பாடி வெளியிடுபவரானார்கள். அங்ஙனம் வெளியிடுகையில், அப்பாடல்கள்யாவும்,

> "சேமங் குருகையோ செய்யதிருப் பாற்கடலோ
> நாமம் பராங்குசமோ நாரணமோ—தாமந்
> துளவோ வகுளமோ தோளிரண்டோ நான்கு
> முளவோ பெருமா னுனக்கு."

என்ற இப்பாடல் வடிவாகச் சிறிதும் வேற்றுமையின்றி ஒற்றுமைப்பட்டிருக்க, இதுபற்றி அவர்களனைவரும் 'இது என்ன அற்புதம்! என்ன அற்புதம்!! இதுவும் ஆழ்வாரது தெய்வத்திருவருளே!!!' என்று அதிசயப்பட்டு,

> "ஈயாடுவதோ கருடற்கெதிரே இரவிக்கெதிர் மின்மினியாடுவதோ?
> நாயாடுவதோ உறுமிப்புலிமுன் நரிகேசரிமுன் நடையாடுவதோ?
> பேயாடுவதோ அழகூர்வசிமுன் பெருமான் வகுளாபரணன் னருள்கூர்ந்
> தோவாதுரையா யிரமாமறையின்னொரு சொற்பொருமோவுலகிற்கவியே."

என்பது முதலாகச் சிற்சில கவிகள்பாடிப் புகழ்ந்து அன்றுமுதல் ஆழ்வார்க்கு விருதுகூறல் முதலிய ஸகலவிபவங்களையும் முன்னினும் பலமடங்கு மிகுதியாக நடப்பித்து வந்தனர்.

இப்படி மதுரகவியாழ்வார் தமது ஆசாரியருடைய பெருமைகளை வெளி

விட்டுக்கொண்டு அத்தலத்திலே சிலகாலம் எழுந்தருளியிருந்து, பின்பு, சிந்தையும் மொழியுஞ் செல்லாநிலைமைத்தான பேரின்பப் பெருவீட்டை அடைந்தனர்.

இங்ஙனம் இவ்வாழ்வார் நம்மாழ்வாருக்குத் திருவடித்தொண்டராயொழுகியதுபற்றி, அவரது திருவடிநிலை மதுரகவிகள் என இவரது திருநாமத்தைவிட்டு வழங்கலாகும்.

[“மாறனடிபணிந்துய்ந்தவிராமாநுசன்” என்பதற்கிணங்க, நம்மாழ்வார் திருவடி நிலைகளுக்கு இராமாநுசன் என்று பல திவ்யதேசங்களில் வழங்கும் திருநாமமும் பொருத்தமுடையதே.]

“ஏரார் மதுரகவி யிவ்வுலகில் வந்துதித்த
சீராருஞ் சித்திரையில் சித்திரைநாள்—பாருலகில்
மற்றுள்ள வாழ்வார்கள் வந்துதித்த நாட்களிலும்
உற்றதெமக் கென்று நெஞ்சே! ஓர்.”

மதுரகவியாழ்வார் வைபவம்
முற்றிற்று.

---

ஸ்ரீரஸ்து.

மதுரகவியாழ்வார் அருளிச்செய்த

# கண்ணிநுண் சிறுத்தாம்பு.

---

## தனியன் உரை.

[நாதமுனிகள் அருளிச்செய்த தனியன்.]

ஶ்லோ: அவிதித விஷயாந்தரச் சடாரே
ருபநிஷதாம் உபகாநமாத்ரபோக: ।
அபி ச குணவசாத் ததேகசேஷீ
மதுரகவிர் ஹ்ருதயே மமாவிரஸ்து ॥

அவிதிதவிஷயாந்தரச்சடாரே ருபநிஷதாமுபகாநமாத்ரபோக:।
அபிச குணவசாத் ததேகசேஷீ மதுரகவிர்ஹ்ருதயே மமாவிரஸ்து.॥

பதவுரை.

| | | | |
|---|---|---|---|
| அவிதித விஷயாந்தர: | (நம்மாழ்வாரைத் தவிர) வேறொரு விஷயத்தைய் அறியாதவரும் | குணவசாத் அபி ச | குணமடியாகவும் |
| சடாரே: | நம்மாழ்வாருடைய (திவ்ய ஸூக்திகளாகிய) | ததேகசேஷீ | அந்த நம்மாழ்வாரொருவரையே தமக்கு சேஷியாகக் கொண்டவருமான |
| உபநிஷதாம் | த்ராவிடோபநிஷத்தான திவ்யப்ரபந்தங்களை | மதுரகவி: | மதுரகவியாழ்வார் |
| உபகாநமாத்ரபோக: | இசைபாடுவது ஒன்றையே பேரின்பமாகக் கொண்டவரும் | மம ஹ்ருதயே | என் நெஞ்சில் |
| | | ஆவிரஸ்து | ஆவிர்ப்பவிக்கக்கடவர். |

நம்மாழ்வார் "உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும்வெற்றிலையு மெல்லாங்கண்ணன்" என்று எம்பெருமானொருவனைத்தவிர வேறொரு விஷயத்தையும் அறியாதிருந்தாற்போல, அந்த நம்மாழ்வாரொருவரைத்தவிர வேறொன்றையுமறியாதவராய், அவருடைய அநுபவம் வழிந்த அருளிச்செயலாகிய திருவாய்மொழிப்பாவின் இன்னிசை பாடித்திரிவதையே காலக்ஷேபமாகக் கொண்டவராய், அவ்வாழ்வார் திறத்திலே ஸ்வரூபப்ரயுக்தமான தாஸ்யத்தோடு குணக்ருதமான தாஸ்யத்தையும் வஹிக்குமவரான ஸ்ரீமதுரகவிகள் எனது நெஞ்சில் எழுந்தருளியிருக்க வேணுமென்கிறது. மதுரகவிகளுக்கு இருந்த ஆசார்ய நிஷ்டை தமக்கும் உண்டாகவேணுமென்ற அவாவுடன் அவரை அநுஸந்திக்கிறபடி.

சடாரே: என்பதை மத்யதீபகமாகக்கொண்டு கீழ்ப்பதத்தோடும் மேற்பதத்தோடும் அந்வயித்து, (முதலில் பஞ்சமீவிபக்தியாகக்கொண்டு) நம்மாழ்வாரிற் காட்டிலும் வேறொன்றையறியாதவராய், என்றும் (பிறகு ஷஷ்டீவிபக்தியாகக்கொண்டு) நம்மாழ்வாருடைய அருளிச்செயலிசைபாடுவதையே காலக்ஷேபமாகக்கொண்டவராய் என்றும் உரைத்தலும் ஒக்குமென்க. இங்கு "விஷயாஜ்ஞ" என்றது ஸப்தாதி விஷயங்களை அன்று; பகவத்விஷயத்தையாம். "உண்டபோதொருவார்த்தையும் உண்ணாதபோதொருவார்த்தையும் சொல்லுவார் பத்துப்பேருண்டிறே; அவர்கள் பாசுரங்கொண்டன்று இவ்வர்த்தமறுதியிடுவது; அவர்களைச் சிரித்திருப்பார்* ஒருவருண்டிறே; அவர் † பாசுரங்கொண்டு இவ்வர்த்த மறுதியிடக்கடவோம்" என்ற ஸ்ரீவசநபூஷண ஸ்ரீஸூக்தியின் வியாக்யானம் ஸேவிக்க.

உபநிஷதாம் என்கிற பஹுவசநம் நான்கு வேதங்களினுடைய ஸாரமாக ஆழ்வார் அருளிச்செய்த திருவிருத்தம், திருவாசிரியம், பெரியதிருவந்தாதி, திருவாய்மொழி என்னும் நான்கு திவ்யப்ரபந்தங்களையுங்குறிக்கும். இப்பதம் உபமாநே என்பதில் அந்வயிக்கவேண்டுகையால் ஏகதேசாந்வய மெனப்படும். இந்த ஏகதேசாந்வயம் சாஸ்த்ர ஸம்மதமேயாம். பல்லாயிரம் ப்ரயோகங்களும் உள்ளன.

ததேகமேய = ஸ: ஏக: மேயோ யஸ்ய ஸ: என்று பஹுவ்ரீஹிஸமாஸம் இங்குக் கொள்ளத்தக்கது. குணக்ருததாஸ்யத்திற்காட்டில் ஸ்வரூப ப்ரயுக்தமான தாஸ்யமே ப்ரதானமென்று ஸத்ஸம்ப்ரதாய ஸித்தாந்தமாயினும், ஆழ்வார் திறத்தில் மதுரகவிகள் குணங்களுக்குத் தோற்றும் அடிமைப்பட்டார் என்பதைத் தெரிவிக்கிறது - மூன்றாமடி. அபிச என்றதனால் முதலடியில் ஸ்வரூப ப்ரயுக்தமான தாஸ்யம் கூறப்பட்டதாக விளங்கும்.

[இதுவும் நாதமுனிகளருளிச்செய்தது.]

வேறொன்றும் நானறியேன் வேதந் தமிழ்செய்த
மாறன் சடகோபன் வண்குருகூர்—ஏறெங்கள்
வாழ்வாமென் றேத்தும் மதுரகவி யாரெம்மை
ஆள்வா ரவரே யரண்.

* ஒருவர்—மதுரகவிகள். † கண்ணிநுண் சிறுத்தாம்பு.

| | |
|---|---|
| வேறு ஒன்றும் நான் அறியேன் | "(நம்மாழ்வார் தவிர) வேறொரு பொருளும் நான் அறியமாட்டேன்; |
| வேதம் தமிழ்செய்த | வேதார்த்தங்களைத் தமிழாக அருளிச்செய்த |
| மாறன் | மாறனென்னும் திருநாமத்தை யுடையவரும் |
| வண் குருகூர் ஏறு | அழகிய திருக்குருகூர் நகர்க்குத் தலைவருமான |
| சடகோபன் | நம்மாழ்வார் |
| எங்கள் வாழ்வு ஆம் என்று | எமக்கு உஜ்ஜீவனராவர்" என்று |
| ஏத்தும் | தோத்திரஞ் செய்தருளின |
| மதுரகவியார் | மதுரகவியாழ்வார் |
| எம்மை ஆள்வார் | நம்மை ஆள்பவர்; |
| அவரே | அந்த மதுரகவிகளே |
| அரண் | (ப்ரபந்நகுலத்துக்கு) ரக்ஷகர். |

"வேறொன்றும் நானறியேன் வேதந் தமிழ்செய்த மாறன் சடகோபன் வண்குருகூரே றெங்கள் வாழ்வாம்" என்னுமளவும் மதுரகவியாழ்வாருடைய அநுஸந்தாநத்தின் அநுவாதம். அன்றி, "வேறொன்றும் நானறியேன்" என்பதைத் தனியாகப்பிரித்து அதனை இத்தனியனுக்கு வக்தாவான நாத முனிகளுடைய சொல்லாக உரைக்கக்கூடுமாயினும் கீழ்த்தனியனில் "அவிதித விஷயாந்தர:" என்னுமதுக்கு மொழிபெயர்ப்பாக அருளிச்செய்ததிற்கு முந்தினபொருளே பொருந்துமென்க.

[வேதம் தமிழ்செய்த.] ஆழ்வாரருளிச்செயல்கள், அளவிறந்த வேதங்களிலே எளிதிற் காணவொண்ணாதபடி மறைந்துகிடந்த தத்துவப்பொருள்களையெல்லாம் எடுத்துத் தெளிவுபடச் சொல்வதற்காகத் திருவவதரித்தவை. சுருங்கச்சொல்லல் விளங்கவைத்தல் முதலிய அழகுகளோடு தத்துவப் பொருள்களின் ஸாரங்களை எடுத்துச்சொல்லி விளக்குந்தன்மையில் வடமொழி வேதங்களினும் இத்தென்மொழிவேதம் மிகச்சிறந்ததென்று கருதிய கம்பர், அளவிறந்த அரியபெரிய பல வேதங்களிலுமுள்ள பொருள்களெல்லாங்கூடி, திருவாய்மொழி ஆயிரம் பாட்டிற்கூறிய ஸாரார்த்தத்தின் ஒரு பகுதியளவுஞ் சொல்லவில்லை என்னுங் கருத்தமையச் சடகோபரந்தாதியிற் பாடிய

"ஆற்றிற்பொதிந்த மணலின் தொகையரு மாமறைகள்
வேற்றிற்பொதிந்த பொருள்களெல்லாம் விழுமாக்கமலஞ்
சேற்றிற்பொதியவிழ்க்குங் குருகூர் செஞ்சொற்பதிக
னூற்றிற்பொதிந்த பொருளொரு கூறுநுவல்கிலவே"

என்னும் பாட்டை அநுஸந்திக்க.

ஸம்ஸ்க்ருத வேதம்போலவே தமிழ்மறையாகிய திவ்யப்ரபந்தங்களும் நித்யமென்பது ஆன்றோர் கொள்கை. திவ்யப்ரபந்தங்களை ஆழ்வார்கள் இயற்றியதாகச் சொல்லுதல் என்னெனின்; வடமொழி வேதங்களை ஸர்வஜ்ஞரூபியான திருமாலினிடம் உபதேசம்பெற்ற பிரமன் தனது வாக்கினால் வெளியிட்ட மாத்திரத்தைக்கொண்டு "முன்னைத் திசைமுகனைத் தான்படைக்க, மற்றவனும் முன்னம் படைத்தனன் நான்மறைகள்" (பெரியதிருமடல்) என்று பிரமன்தானே

அவற்றைப் படைத்ததாகச் சொல்லுதலும், பின்பு அவ்வடமொழி வேதங்களின் ஒவ்வொருபகுதியை ஒவ்வொரு முனிவர் ஒவ்வொருசமயத்தில் வெளியிட்டதுகொண்டு அந்தந்தப்பகுதியை அந்தந்த முனிவரியற்றியதுபோல (தைத்திரீயம், காண்வம் இத்யாதியாக) அவரவர் பெயரையிட்டு வழங்குதலும் போலவே, எம்பெருமான் திருவருளால் உணர்ந்த ஆழ்வார்கள் திவ்யப்ரபந்தங்களை உணர்ந்துவெளியிட்ட மாத்திரத்தைக்கொண்டு அவர்கள் செய்ததாகச் சொல்லுதல் உபசாரவழக்காம் என்பது ஸம்ப்ரதாயம். இனி இங்கு விரித்துரைக்கவேண்டும் அம்சங்களை மற்றோரிடத்திற் பன்னியுரைப்போமாக.

மாறன் = ஆழ்வார் பிறந்தபொழுதே தொடங்கி அழுதல் பால்குடித்தல் முதலிய லோகவ்யாபாரம் ஒன்றுமின்றி உலகநடைக்கு மாறாக இருந்ததனால் இவர்க்கு மாறன் என்று திருநாமமாயிற்று; வலிய வினைகட்கு மாறாக இருந்தலாலும், அந்யமதஸ்தர்களை அடக்கி அவர்கட்கு சத்ருவாயிருத்தலாலும், பாண்டியநாட்டுக்குத் தலைமையாகத் தோன்றியதனாலும் வந்தபெயரென்றலுமுண்டு.

சடகோபன் = கர்ப்பத்திலிருக்கிறபொழுது ஞானிகளாயிருக்கின்ற குழந்தைகளைப் பிறந்தவுடனே தனது ஸ்பர்சத்தால் அஜ்ஞாநத்துக்கு உள்ளாக்கி அழுதல் அரற்றுதல் முதலியன செய்யும்படி பண்ணிவிடுந் தன்மையதான சடமென்னும் வாயு, இவ்வாழ்வார் அவதரித்தபொழுது இவரையும் தொடுதற்குவர, அப்பொழுது இவர் அதனை ஹுங்காரத்தால் ஒறுத்து ஓட்டியொழித்ததனால் சடகோபர் என்று இவர்க்குத் திருநாமமாயிற்று. எம்பெருமானுடைய திவ்யமங்கள குணங்களாகிய அமுதவெள்ளத்திலே முழுகி மிகவும் ஈடுபட்டு நன்றாக ஆழ்ந்திடுபவராதல்பற்றி ஆழ்வார்கள் என்று பெயர்பெற்ற பரமபாகவதர்களில் இவர் ப்ரதாநராதலால், ஆழ்வார் என்பது இவர்க்குச் சிறப்புப் பெயராகவழங்கும். மாறன், பராங்குசன், வகுளாபரணன், திருநாவீறுடையபிரான், திருக்குருகூர்நம்பி, குருகைப்பிரான், வழுதிநாடன் முதலிய திருநாமங்களும் இவர்க்கு உண்டு.

குருகூர்—நூற்றெட்டுத் திருப்பதிகளுள் பாண்டியநாட்டுத் திருப்பதி பதினெட்டில் ஒன்று; ஆழ்வார்திருநகரி என்று ப்ரஸித்தி. குருகாபுரீ என்று வடமொழித்திருநாமம். ஏறு = வடமொழியில், புங்கவ: ருஷப: இத்யாதி சப்தங்கள்போல் தமிழில் ஏறு என்பது ஆண்பாற் சிறப்புப்பெயர்; ஸ்ரேஷ்டன் என்றபடி; "வண்குருகூரேறு" என்றவிடத்து வண்மையைக் குருகூரில் அந்வயிப்பதினும் குருகூரேற்றில் அந்வயிப்பது அழகிதாம். அடியார்கட்கு அமுதவெள்ளமாக அருளிச்செயல்களை உபகரித்தருளிய உதாரசிகாமணியாகிய குருகூரதிபதி என்கை.

முதலடியில் "நான் அறியேன்" என்று ஒருமையாகக் கூறியதற்கு ஏற்ப "என் வாழ்வாமென்றேத்தும்" என்று மேலும் ஒருமையாகவே கூறவேண்டியிருக்க, எங்கள் என்று பன்மையாகக்கூறியது-தம்மோடு ஸம்பந்தம்பெற்ற

ப்ரபந்த ஸந்தாநத்தவரனைவரையும் உளப்படுத்திக் கூறியவாறுமெனக்கொள்க. திருவிருத்தத்தில் ஆழ்வார் "இனி யாம் உறாமை" என்று முதலிற் பன்மை யாகக்கூறி, மேல் "அடியேன் செய்யும் விண்ணப்பமே" என்று ஒருமையாகக் கூறியதை-தம்முடைய ஸம்பந்தம்பெற்ற ப்ரபந்நர்கள் எல்லார்க்குமாகத் தாம் ஒருவர் விஜ்ஞாபநம் பண்ணுகிறாரெனக்கொண்டு பொருத்துதல் இங்கு ஸ்மரிக் கத்தக்கது.

"அவரே சரண்" என்றும் பாடமுண்டாம்.

தனியன் உரை முற்றிற்று.

---

ஸ்ரீரஸ்து.

## நம்மாழ்வாருடைய மஹிமையையும் அவரது திவ்யப்ரபந்தத்தின் பெருமையையும் பற்றி விநோதரஸமஞ்ஜரியில் எழுதியுள்ள ஒரு விஷயம்.

திருவள்ளுவர் குறள்செய்தகாலத்தில் அவரும் ஒளவையும் இடைக்காட ரும் சந்திந்தசமயத்தில், வள்ளுவரைநோக்கி மற்றையிருவரும் 'நீர் செய்த நூல் எத்தன்மைத்தாகியது?' என்று வினவ, அவர் 'அகஸ்தியரால் ப்ரவர்த்தம் பண்ணப்பட்ட இயல் இசை நாடகம் என முத்திறத்ததாகிய தமிழும், என்னாற் செய்யப்பட்ட குறளும், உடையநங்கையின் திருக்குமாரராகிய சடகோபர் அருளிச்செய்த திருவாய்மொழியின் புத்திரஸ்தாநமாகிய வழி நூலாம்' என்னுங் கருத்தை உள்ளமைத்து

"குறுமுனிவன் முத்தமிழு மென்குறளு நங்கை
சிறுமுனிவன் வாய்மொழியின் சேய்"

என்று சொன்னதையும்,

அதுகேட்டு ஒளவை, 'அர்த்தபஞ்சகத்தையும் சதுர்வித புருஷார்த்தத் தையும் அறப்பால் முதலிய முப்பாலுள் அடக்கி அமைக்கப்பட்ட உண்மைப் பொருளாகிய எவ்வகைப்பட்ட வேதங்களுக்கும் சம்மதமான மேலான பொருளை, குளிர்ச்சிதங்கிய தாமிரபரணி தீரத்திலிருக்கும் திருக்குருகூரிற் காரி முதலியார் புதல்வராய் அவதரித்த நம்மாழ்வாரது திருவாய்மொழியாகிய திராவிடவேதமென்று சிலர் சொல்லுவார்கள்; நான் அவர்கள் சொல்லைமறுத்து, அக்குறளை இந்த உலகத்திற்குத் தாயாகிய ஸ்ரீமந்நாராயணனால் பிரமனுக்கு உபதேசிக்கப்பட்டு வந்த கீர்வாணவேதமென்றே சொல்லுவேன்' என்னுங் கருத்தை உள்ளிட்டு,

"ஐம்பொருளு நாற்பொருளு முப்பொருளிற் பெய்தமைத்த
செம்பொருளை யெம்மறைக்குஞ் சேட்பொருளைத்-தண்குருகூர்ச்
செய்மொழிய தென்பர் சிலரியா னிவ்வுலகின்
தாய்மொழிய தென்பேன் றகைந்து." என்று சொன்னதையும்,

இடைக்காடர்: திராவிடவேதமாகிய செய்மொழியையும் கீர்வாண வேதமாகிய தாய் மொழியையும் ஆராய்ந்து சொல்லுமிடத்தில், இரண்டும் ஒன்றேயாம்; திருவாய்மொழியை யாவரும் சங்கையின்றி வேதமென்றே சொல்லுவார்கள்; திருவாய்மொழியைப்போலச் சிறந்த நூல்கள் அநேகம் உண்டு என்று சிலர் குதர்க்கஞ்செய்தாலும், நான் அவர்களை மறுத்து, அவைகளும் இந்தக்குறளும் அத்திருவாய்மொழியினது சாயையாயிருப்பவைகள் என்றே சொல்லுவேன்' என்னுங் கருத்தையடக்கி,

"செய்மொழியோ தாய்மொழியோ செப்பி லிரண்டுமொன்றவ்
வாய்மொழியை யாரு மறையென்ப-வாய்மொழிபோ
லாய்மொழிகள் சால வுளவெனினு மம்மொழியின்
சாய்மொழியென் பேன்யான் றகைந்து" என்று சொன்னதையும்,

ஒருகாலத்தில் தாமிரபரணிநதியின் வடகரையில் வசித்திருந்த யோகியொருவர் வளர்த்த நாயொன்று தென்கரையிலுள்ள ஆழ்வார்திருநகரிக்குப் பிரதிதினமும் மத்தியானவேளையிற்போய் வீதியிலிருக்கும் வைஷ்ணவர்களுடைய உச்சிஷ்டத்தைத்தின்று வயிற்றை நிரப்பிக்கொண்டு வருகிற வழக்கப்படி ஒருநாள்போய்த் திரும்பிவர விளம்பித்ததனால், யோகியானவர், நாய் இன்னும் வரவில்லையே யென்று ஆற்றோரத்தில் வந்து பார்க்கும்பொழுது, அந்நாய் நட்டாற்றில் வருகையில் அகஸ்மாத்தாகப் பெருவெள்ளம் வந்தமையால் நீந்திக் காலோய்ந்து போய் நீரில் அமிழ்ந்து இளைப்பிற்று; அந்தக்ஷணத்தில் அதன் கபாலம் வெடித்து அந்த ரந்திரத்தின்வழியாய் நாயின் ஆத்மாவாகிய சோதியானது எழுந்து அமாவாசையிருளில் அநேகம் தீவட்டி கொளுத்தினதுபோலப் பிரகாசித்ததைப் பிரத்யக்ஷமாகப்பார்த்து, 'அசேதநமாகிய நாயும், பெறுதற்கரிய பேறுபெற்றதே; இதென்ன சாதநத்தை யுடைத்தாயிருந்தது? ஒன்றுமில்லா திருந்தும் ஆழ்வார்திருநகரியின் திருவீதி யெச்சிலை உண்டதனாலல்லவோ இப்படிச் சம்பவித்தது; இது, தபசிகள் யோகிகள் ஞானிகள் முதலானவர்களுக்கும் சித்திக்கமாட்டாதே' என்று நினைத்து மனமுருகிக் கண்ணீர்விட்டு அழுது அவர்,

"வாய்க்குங் குருகைத் திருவீதி யெச்சிலை வாரியுண்ட
நாய்க்கும் பரமபத மளித்தாயந்த நாயோடிந்தப்
பேய்க்கு மிடமளித்தாற் பழுதோ பெருமாள்மகுடஞ்
சாய்க்கும் படிக்குக் கவிசொல்லு ஞானத்தமிழ்க்கடலே!"

என்பது முதலாகச் சில பாடல்களால் ஆழ்வாரை ஸ்தோத்திரித்ததையும் நினைக்க. ... ... ... ... ... *



ஸ்ரீ

மதுரகவியாழ்வார் அருளிச்செய்த

# கண்ணிநுண் சிறுத்தாம்பு.

---

இத்திவ்யப்ப்ரபந்தம் முதலாயிரத்தில் சாமப்ரபந்தமாக ஸ்ரீமந்நாதமுனிகளால் வகுக்கப்பட்டது. திருவாய்மொழியை ஸேவிக்கத் தொடங்கும்போதும் சாத்தும்போதும் இப்ப்ரபந்தத்தை நியமேந அநுஸந்திப்பது ஸம்ப்ரதாயம். இது திருவாய்மொழிக்கு சேஷமான ப்ரபந்தமாதல்பற்றி, திருவாய்மொழி போல் இதுவும் வீதிகளில் ஸேவிக்கப்படக் கூடாதென்று பூர்வாசார்ய நியமநம்.

"பொய்கையார் பூதத்தார் பேயார் புகழ்மழிசை ஐயன் அருள்மாறன் சேரலர்கோன் துய்யபட்ட நாதன் அன்பர்தாள் தூளி நற்பாணன் நன்கவியன்" என்னும் ஆழ்வார்கள் பதின்மரால் அருளிச்செய்யப்பட்ட நாலாயிர திவ்ய ப்ரபந்தத்தில் பெரும்பாலன வழங்குதலின்றி மழுங்கிக்கிடந்தகாலத்தில், ஸ்ரீமந்நாதமுனிகள் என்று கூறப்படுகின்ற ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாய ப்ரதமாசார்யரானவர், திருக்குருகூரி லெழுந்தருளி, கண்ணிநுண் சிறுத்தாம்பு என்னும் இப்பிரபந்தத்தைத் தேவகானத்தாற் பன்னீராயிரம் முறை பாட, அப்போது நம்மாழ்வார் ப்ரஸந்நராகி அந்த நாதமுனிகட்கு நாலாயிர திவ்வியப்பிரபந்தத்தையும் உபதேசித்தருளினரென்று ஸத்ஸம்ப்ரதாயம் வல்ல பெரியோர் அருளிச்செய்திருப்பதைக் கொண்டு இத்திவ்யப் பிரபந்தத்தின் ஒப்புயர்வற்ற பெருமையை உய்த்துணர்க.

"கண்ணிநுண் சிறுத்தாம்பு" என்று இந்நூல் தொடங்குவதனால் 'முதற்குறிப்பு' என்னும் இலக்கணத்தால் இந்நூற்கு அதுவே திருநாமமாயிற்று; திருப்பல்லாண்டு, அமலனாதிபிரான் முதலியனபோல.

ஆழ்வாருடைய தோத்திரமாகத் திருவவதரித்த இப்பிரபந்தம்-எம்பெருமானுடைய தோத்திரமாகிய திவ்யப்ரபந்தங்களினிடையே சேர்த்து அநுஸந்திக்கப்பட்டுவருதலும், இதனையுஞ்சேர்த்து நாலாயிர மென்று கணக்கிடுதலும் பொருந்துமோ? என்று சங்கிப்பவர்கள்,

"வாய்த்த திருமந்திரத்தின் மத்திமமாம் பதம்போல்
சீர்த்த மதுரகவி செய்கலையை—ஆர்த்தபுகழ்
ஆரியர்கள் தாங்க ளருளிச் செயல்நடுவே
சேர்வித்தார் தாற்பரியம் தேர்ந்து"

என்று மணவாளமாமுனிகள் அருளிச்செய்த உபதேச ரத்தினமாலைப் பாசுரத்தையும்,

"இதுதான் * பயிலுஞ் சுடரொளி * நெடுமாற்கடிமை தொடக்கமானவற்றின் அர்த்தத்தை ப்ரதிபாதிக்கையாலே இதின் அர்த்தகௌரவத்தை

விசாரித்து, நன்றாயிருப்பதொரு ஹாரத்தைச்சமைத்து அது ஒளிபெறும்படி ஸ்லாக்யமாயிருப்பதொரு நாயகக்கல்லை அதன் நடுவே பதித்தாற்போலே அருளிச்செயல்கள் தான் நிறம்பெறும்படி அவற்றின் நடுவே இத்தைச் சேர்த்தார்கள்; சேர்த்த சேர்க்கையின் சாதுர்யத்தாலேயிறே முத்துமாலை தொடக்கமான ஆபரணாதிகள் நிறம்பெறுவது; அதுபோலேயாய்த்து இது;"

என்று அப்பாட்டின் வியாக்கியானத்தில் பிள்ளைலோகாசார்யஜீயர் உரைத்ததையும் உற்று நோக்குக.

இப்பிரபந்தம் அந்தாதித்தொடையாற் பாடப்பட்ட நூலாதலின் சொற்றொடர்நிலை பொருட்டொடர்நிலை என்னும் இருவகையுள் சொற்றொடர்நிலையாம். அந்தாதித்தொடையாவது-முன்நின்றபாட்டின் இறுதியெழுத்தாயினும் அசையாயினும் சீராயினும் அடியாயினும் பின்வரும் பாட்டின் முதலாகப் பாடுவது. இந்நூல் இறுதிச்செய்யுளின் அந்தமே முதற்செய்யுளின் ஆதியாக அமையும்படி மண்டலித்துப் பாடப்பட்டுள்ளமையுங் காண்க. இது தொண்ணூற்றறுவகைப் பிரபந்தங்களுள் ஒன்றாம். பதிற்றந்தாதி, நூற்றந்தாதி என்ற வகைகளில் இந்நூல் பதிற்றந்தாதியாம். அந்தாதி வெண்பாவினாலேனும் கட்டளைக் கலித்துறையினாலேனுமே பாடப்படவேணுமென்பது நியதியன்றென்ப. இப்பிரபந்தம் கலிவிருத்தத்தில் அமைந்தது.

கம்பர் தாம் ஆழ்வார் விஷயமாகச் சடகோபரந்தாதி பாடுதற்கு இக்கண்ணிநுண் சிறுத்தாம்பை வழிகாட்டியாகக் கொண்டமையை அவர்தாமே வெளியிட்டுரைத்த

"மன்றேபுகழுந் திருவழுந் தூர்வள்ளல் மாறனைமுன்
சென்றே மதுரகவிப் பெருமான் தென்தமிழ்த்தொடையில்
ஒன்றேபதிக முரைத்தவன் பொன்னடி யுற்றுநின்று
னென்றே பதிகம் பதிகமதாக இசைத்தனனே"

என்னும் பாயிரம் இங்கு நினைக்கத்தக்கது.

இத்திவ்யப்ரபந்தத்திற்கு, நஞ்சீயர், நம்பிள்ளை, பெரியவாச்சான்பிள்ளை, அழகியமணவாளப்பெருமாள்நாயனார் இவர்கள் மணிப்ரவாள நடையில் அருளிச்செய்த சிறந்த வியாக்கியானங்கள் உள்ளன. வடகலை ஸம்ப்ரதாயத்தில் பரகாலஜீயர் இயற்றிய வியாக்கியானமுமுளது.

முன்னோருரைகளை முற்றுந்தழுவியும் புதிதாகப் பல விஷயங்கள் சேர்த்தும் அடியேனால் எழுதப்படுகிற இவ்வுரையிலுள்ள குற்றங்குறைகளைப் பெரியோர் பொறுத்தருள்வாராக.

மதுரகவியாழ்வார் திருவடிகளே சரணம்.

### பிரபந்தசாரம்.

“தேறியமா ஞானமுடன் திருக்கோளூரில்
சித்திரையில் சித்திரைநாள் வந்து தோன்றி
ஆறிய நல்லன்புடனே குருகூர்நம்பிக்
கனவரத மந்தரங்க வடிமை செய்து
மாறனையல் லாலென்று மறந்துந் தேவு
மற்றறியே னெனுமதுர கவியே நீமுன்
கூறிய கண்ணிநுண்சிறுத்தாம்பதனிற் பாட்டுக்
குலவு பதினொன்றுமெனக் குதவு நீயே.”

---

### கண்ணிநுண் சிறுத்தாம்பின் அர்த்தஸங்க்ரஹமாக அதிகாரஸங்க்ரஹத்தில் வேதாந்ததேசிகன் அருளிச்செய்த பாட்டு.

இன்பத்தி லிறைஞ்சுதலில் இசையும்பேற்றில்
இகழாத பல்லுறவில் இராகமாற்றில்
தன்பற்றில் வினைவிலக்கில் தகவோக்கத்தில்
தத்துவத்தை யுணர்த்துதலில் தன்மையாக்கில்
அன்பர்க்கே யவதரிக்கு மாயன்நிற்க
அருமறைகள் தமிழ்செய்தான் தாளேகொண்டு
துன்பற்ற மதுரகவி தோன்றக்காட்டும்
தொல்வழியே நல்வழிகள் துணிவார்கட்கே.

இன்பத்தில்—“அண்ணிக்கு மமுதூறும்” என்று முதற்பாட்டிற் சொல்லப்பட்டு “இன்பமெய்தினேன்” என்று இரண்டாம்பாட்டில் அநுவதிக்கப்பட்ட ஆநந்தரூபமான அநுபவத்தில்.

இறைஞ்சுதலில்—“மேவினேனவன் பொன்னடி” என்று கூறப்பட்ட சரண ஸமர்ப்பணத்தில்.

இசையும்பேற்றில்—அப்யுபகமம் பண்ணும் புருஷார்த்தத்தில்; “திரிதந்தாகிலும்” என்கிற மூன்றாம்பாட்டில்-பகவத்விஷயத்தை ஆழ்வாருகந்த விஷயமென்று அவ்வழியாலே இசைகின்றேனொழிய, ஆழ்வாரைத் தவிர்ந்து பகவத்விஷயமானது எனக்கு ஸ்வத: இசையக்கூடியதன்றென்னுமளவும் தாத்பர்யமாகையாலே ஆழ்வாரே தமக்கு நிருபாதிகமாக இசையக்கூடிய புருஷார்த்தமென்று வ்யஞ்ஜிதமாகிற அர்த்தத்தை ஸங்க்ரஹித்தபடி.

இகழாத பல்லுறவில்—ஒருகாலும் சிதையாத பந்துத்வத்தில்; ‘அன்னையாய் அத்தனாய்’ என்றதை ஸங்க்ரஹித்தபடி.

இராகம் மாற்றில்—அநுசிதமான விஷயத்திலுள்ள ஆசையைத் தவிர்த்ததில்; “முன்னெலாம்...நம்பினேன்; இன்று சதிர்த்தேன்” என்றதில் நோக்கு.

தன்பற்றில்—தானே தன்பற்றை யுண்டாக்குகையில்; “இன்றுதொட்டும்...தன் புகழேத்தவருளினான்.”

வினைவிலக்கில்—பாப நிவாரணத்தில்; “பண்டை வல்வினை பாற்றியருளினான்.”

தகவு ஒக்கத்தில்—க்ருபையின் உத்கர்ஷத்தில்; “அருள்கண்டீரிவ்வுலகினில் மிக்கதே.”

தத்துவத்தை உணர்த்துதலில்—தத்வோத்போதநத்தில்; “வேதத்தினுட்பொருள் நிற்கப்பாடி.”

தன்மை ஆக்கில்—ஸ்வரூப விகாஸத்தையுண்டாக்குவதில்; “செயல் நன்றாகத் திருத்திப் பணி கொள்வான்.”

இவை பத்தும் விஷயஸப்தமிகள்; இவை விஷயமாக என்றபடி. இவற்றுக்குத் “தோன்றக்காட்டும்” என்பதோடு அந்வயம். இவ்வர்த்தங்களை உட்கொண்டு ஸ்ரீமதுரகவிகள் அருளிச்செய்த என்றபடி.

[அன்பர்க்கே இத்யாதி.] ஆச்ரிதர்க்காகவே அவதரித்தருளுமவனான எம்பெருமான் நிற்கச்செய்தேயும் அவனை அநாதரித்து, வேதந் தமிழ்செய்த மாறன் சடகோபன் திருவடிகளையே ஆச்ரயித்துத் துயர்தீர்ந்த மதுரகவிகள் விளங்கக் காட்டியருளின வழியே முமுக்ஷுக்களுக்கு உபாதேயமான மார்க்கம். ஸர்வபலப்ரதனான ஸர்வேச்வரனிருந்தாலும் ஸதாசார்ய ஸமாச்ரயணமில்லாதார்க்கு மோக்ஷங்கிடையாதென்று முறையிடுகின்ற மதுரகவிகளுடைய உக்தியும் அநுஷ்டாநமுமே ஆதரணீயமென்றபடி.

ஆழ்வார் திருவடிகளே சரணம்—தூப்புல்பிள்ளை தூமொழி வாழி.

---

ஸ்ரீரஸ்து.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

# கண்ணிநுண் சிறுத்தாம்பு உரை

## அவதாரிகை.

ஸத்வகுணமொன்றின் வழியிலேயே நில்லாது முக்குணங்கட்கும் வசப்பட்டொழுகின ரிஷிகளிற் காட்டில் ஆழ்வார்கள் பரமவிலக்ஷணர்கள்.

எங்ஙனே? என்னில்;

ரிஷிகளானவர்கள் தாம் தாம் அநுஷ்டித்த தபோரூபமான தர்மத்தினுடைய சக்தியாலே பிறந்த ஞானத்தினால்; அறியவேண்டியவற்றைத் தெளிய அறிந்து மகிழ்ந்து அந்தத்தெளிவும் மகிழ்ச்சியும் அடியாக மேன்மேலும் சப்

தங்களைத் தொலைத்தனர்; ஆழ்வார்கள், [illegible] மயர்வற மதி நலமருளப்பெற்று ஞானபரிபாகரூபமான பக்தியாலே விரஹவ்யஸனத்தில் ஞான மெல்லாம் அழிந்தடியோடே கலங்கி, நினைத்தபடி எம்பெருமானை அநுபவிக் கப்பெறாமையாலே சோகமுற்று "எத்திறம்! உரலினோடு இணைந்திருந்தேங்கிய எளிவே!" என்றும் "பிறந்தவாறும்" என்றும் "கண்கள் சிவந்து" என்றும் ஒவ்வொரு திருவாய்மொழியில் அவ்வாறு மாஸமாக ஆறுமாஸம் மோஹித்து, ஒருசொல் எடுக்கும்போது ஒருநாளை யெடுக்குமாபோலே வருந்தப்பட்டு, பகவ தநுபவம் பெறாத துயரத்தினால் அவன்படிகளைப் பலகாலும் சொல்லிப் பொரு மிப்பொருமி அழுது உள்ளமுருகிக் குரல்தழுத்து திவ்யப்ரபந்தங்களை அருளிச்செய்தனர்.

இன்னமும், வேதத்தையும் அஷ்டாங்கயோகத்தையும் பயின்று அவ்வழி யாலே பரமாத்மாவை இன்னான் இனையான் என்று தெளிந்து, இப்படி தம் முயற்சியாலேகண்ட காட்சியில் வைசத்யமில்லாமையாலே இன்றளவும் ஸம் ஸார போக விஷயங்களான ஆசாபாசங்களாலே கட்டுப்பட்டிருப்பர் - ஓதி யுணர்ந்த ரிஷிகள்; தன்னை ஸேவிப்பதற்கு ஸாதகமாக எம்பெருமான் அருளிய திவ்யசக்ஷுஸ்ஸாலே, ப்ரமருத்ராதிகட்கும் அரியனான அவனை விசததமமாக ஸாக்ஷாத்கரிக்கப்பெற்ற ஆழ்வார்களுக்கு அவனது திருவருளால் வன்பாசங்க ளனைத்தும் ஸவாஸநமாக விட்டகன்றன.

இன்னமும் ரிஷிகளுக்கு, பலமூலபத்ர வாயுதோயங்கள் [பழம், வேர், இலை, காற்று, நீர்] கள் தாரகமும் போஷகமும் போக்யமுமாம்; "உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும்வெற்றிலை யுமெல்லாங் கண்ணன்" என்றிருப்பர் ஆழ் வார்கள்.

இன்னமும், எம்பெருமானைப்பிரிந்த துயரத்தினால் கண்ணுங்கண்ணீரு மாய், கடலோடு மலையோடு ஆகாசத்தோடு வாசியற எங்குந்தேடி நெஞ்சுகலங் கித் "திருமாலே!" என்று கூப்பிட்டு "எங்கேகாண்கேன்!" என்று எம்பெரு மான் விஷயத்திலே ஆழ்வார்கள் படுகிறபாட்டை ரிஷிகள் அந்தோ! மக்களைப் பிரிந்து படுவர்கள். [வஸிஷ்டன் புத்ரவிரஹ க்லேசத்தாலே மரணத்தை விரும்பி மலையிலேறி விழுவது, நெருப்பில் குதிப்பது, கழுத்தில் கல்லைக்கட்டிக் கடலிலேவிழுவதானையும், வேதவ்யாஸபகவான், புத்ரவிரஹம் பொறுக்கமாட் டாமல் "புத்ரனே!" என்று வாய்விட்டுக்கதறி அழுதுகொண்டு, காணப்பெறா மையால் அலைந்து திரிகையுமாகிற ரிஷிசரித்திரங்கள் உணரத்தக்கன.]

இன்னமும், எம்பெருமானை அடைவதே பேறாகவும், கருமம் ஞானம் முத லியனவே அப்பேற்றுக்கு ஸாதநமாகவும், இந்திரன் முதலிய தேவதைகளுக்கு அந்தர்யாமியான ஈச்வரனே உத்தேச்யனாகையாலே இந்திராதி தேவர்கள் அநு வர்த்தநீயராகவும் ரிஷிகள் பேசுவர்கள்; அங்ஙனன்றி, கைங்கர்யமே புருஷார்த் தமாகவும், [illegible] ஸாதநமாகவும், தேவதாந்தரங்கள் அநுவர்த்தநீயரல்லராகவும் ஆழ்வார்கள் அறுதியிட்டிருப்பர்.

இப்படிகளாலே ரிஷிகளிற்காட்டில் வேறுபாடுபெற்றிருக்கும் ஆழ்வார்க ளனைவர்களிலும் பரமவிலக்ஷணர் ஸ்ரீமதுரகவியாழ்வார்; எங்ஙனேயெனில்; எம் பெருமானுக்கு அடிமைப்படுவதிற்காட்டிலும் பாகவதர்கட்கு அடிமைப்படுதலே

பரமபுருஷார்த்தம் என்னும் ஸாரமான ரஹஸ்யார்த்தத்தை நன்குணர்ந்து அந்நிலையிலே ஊன்றி நின்றனராகலின்.

“அவனடியாரடியே கூடுமிதுவல்லால், விடுமாறென்பதென்” என்றும், “எம்பெருமான் தாள்தொழுவார் காண்மின் என்தலைமேலாரே” என்றும், “ஆவியென்றருளி உன்னடியார்க் காட்படுத்தாய்” என்றும், “அடியார்க்கென்னை யாட்படுத்த விமலன்” என்றும் பல பாசுரங்களாலே மற்றையாழ்வார்கள் பகவச்சேஷத்வத்தோடே கலந்தகட்டியாக அநுஸந்தித்த பாகவதசேஷத்வத்தை இவ்வாழ்வார் நிஷ்க்ருஷ்டவேஷமாகக் கடைப்பிடித்து, ஆசார்ய சரணாச்ரயித்ததல்லது தேவுமொன்றறியாமல் ததேகநிஷ்டராயிருந்தது இவர்க்கு அநந்யஸாதாரணமான அதிசயமேயாம்.

ஒரு முமுக்ஷுவுக்கு நான்கு வ்யக்திகள் ஆதரிக்கத்தக்கவர்கள்; எம்பெருமானும் பிராட்டியும் ஆசார்யனும் ஸ்ரீவைஷ்ணவர்களும். இவர்களுள் எம்பெருமான், அடியிலே இழந்துகிடந்த கரணகளேபரங்களைத் தன் அருளாலே கொடுத்து இவனைக் கரைமரஞ்சேர்க்கும் தேவனாகையாலே ஆதரிக்கத்தக்கவன். பிராட்டி, காப்புறையடியாக இவனிடத்தில் நிருபாதிக வாத்ஸல்யமுடையளாகையாலும், இவன் தன் குற்றங்களைக்கண்டு அஞ்சி எம்பெருமானை அணுகக் கூசும்போது புருஷகாரம்பண்ணிச் சேர்ப்பிக்குமவளாகையாலும் ஆதரிக்கத்தக்கவள். ஆசார்யன், இவனுக்கு பகவத்விஷயத்தையும் பிராட்டி வைபவத்தையும் உபதேசிக்குமவனாகையாலும், தான் அநுஷ்டித்துக்காட்டி இவனை அநுஷ்டிப்பிக்குமவனாகையாலும், இவனது குற்றங்களைப் பார்த்தவளவிலும் கைவிடாதவனாகையாலும், தன் காரியத்தை மறந்தாகிலும் இவனுடைய ஹிதமே பார்த்துப் போருமவனாகையாலும் ஆதரிக்கத்தக்கவன். ஸ்ரீவைஷ்ணவர்கள், இவனுக்கு முதலிலே ருசியைப் பிறப்பித்தவர்களாகையாலும், ஆசாரியருபதேசித்த ஞானத்துக்கு அபிவிருத்தியைப் பண்ணுமவர்களாய் உசாத்துணையாகையாலும், ஆசாரியனிடத்தில் பக்திகளை வளரச் செய்யுமவர்களாகையாலும், ப்ராக்ருத பாரவச்யத்தாலே இவனுக்கு நேரும் தவறுதல்களைத் திருத்தவல்லவர்களாகையாலும் ஆதரிக்கத்தக்கவர்கள். ஆக இந்நால்வரும் ஆதரணீயர் என்னுமிடத்தை

“மாத்ருதேவோ பவ, பித்ருதேவோ பவ!
ஆசார்யதேவோ பவ, அதிதிதேவோ பவ”

[மாத்ருதேவோபவ பித்ருதேவோபவ
ஆசார்யதேவோபவ அதிதிதேவோபவ]

என்று உபநிஷத்தும் ஓதிவைத்தது. இங்கு, அதிதி சப்தம் ஸ்ரீவைஷ்ணவ வாசகமோவெனில்; ஆம். அதிதிகளாவோர் - தாங்கள் முன்பு நின்ற நிலைகுலைந்து பிறரகத்திலே புகுமவர்கள்; ஸ்ரீவைஷ்ணவர்களும் ப்ராக்ருத ப்ராக்ருதங்களை விட்டு எம்பெருமானுடைய சரணத்திலே புகுந்தவர்களாகையாலே அதிதி சப்தம் ஸ்ரீவைஷ்ணவபரமாகக் குறையில்லை.

இனி, இந்நால்வரில் மிகவும் ஆதரிக்கத்தக்கவர் ஆர்? என்னில்; எம்பெருமான் பிராட்டிகளுடைய வைபவஜ்ஞானமும், ஸ்ரீவைஷ்ணவர்களுடைய வைபவஜ்ஞானமும் இவனுக்கு உண்டானது ஆசார்ய அங்கீகாரத்திற்குப் பின்பாகையாலே, விசேஷித்து ஆதரணீயன் ஆசாரியனேயாய்த்து.

ஆகையாலே, இந்த மதுரகவியாழ்வார்-ஆசார்யவைபவத்தை நன்கு அறியுமவராகையாலும், ஆழ்வார் திருவடிகளிலே நெடுநாள் கைங்கரியம்பண்ணி அவருடைய அநுக்ரஹத்துக்கு இலக்காய்ப் போந்தவராகையாலும், அவர் செய்தருளின உபகாரத்துக்குக் கைம்மாறு உண்டாக நினைத்திராதவராகையாலும், அவரை வாயாரப்புகழ்ந்து தம்முடைய உள்ளடங்காத பக்திக்குப் போக்குவிட வேண்டுகையாலும் இக்கண்ணிநுண் சிறுத்தாம்பு முகத்தாலே ஆழ்வார் வைபவத்தைப் பேசுகிறார். ஈச்வரன் ஆராதிக்க அரியனையும், ஆசாரியன் ஆராதிக்க எளியனையுமிருப்பான்; ஈச்வரனை ஆராதிக்க இழிந்த ஆழ்வார்க்குத் திருவிருத்தம் முதலிய நான்கு திவ்யப்ரபந்தங்கள் வேண்டிற்று; ஆசாரியனை ஆராதிக்க இழிந்த இம்மதுரகவிகளுக்கு இப்பத்துப்பாட்டுமே அமைந்தது.

இம்மதுரகவிகளுடைய அத்யவஸாயத்துக்குப் புராணபுருஷர்களில் யாரை ஒப்புச்சொல்லலாமென்னில்; ஸ்ரீராமாயண புருஷர்கள் நால்வரில் ஒருவரான ஸ்ரீசத்ருக்நாழ்வானை ஒப்புச்சொல்வது பொருந்தும். வேதத்தின் உபப்ரும்ஹணமாக அவதரித்த ஸ்ரீராமாயணத்தில் ராம லக்ஷ்மண பரத சத்ருக்நர் என்கிற ராமாயண புருஷர்கள் நால்வரும் நான்கு அர்த்தங்களை அநுஷ்டித்துக் காட்டினர்: 'பெரியோர் சொல்வதைச் சிறியோர் செய்யக்கடவர்' என்கிற ஸாமாந்யதர்ம முறைமையைப் பித்ருவசந பரிபாலநத்தி முகத்தாலே பெருமாள் அநுஷ்டித்துக் காட்டினார். 'சேஷபூதன் சேஷிவிஷயத்தில் கைங்கரியம் பண்ணி ஸ்வரூபலாபம் பெறக்கடவன்' என்கிற விசேஷதர்மத்தை இளையபெருமாள் அநுஷ்டித்தார். பரதாழ்வானும் இந்த சேஷ சேஷி முறைமையையே பரிபாலித்தவராயினும் இவர்க்கு விசேஷமுண்டு: நிர்ப்பந்தப்படுத்தி அடிமைசெய்தார் இளையபெருமாள்; இவர் அங்ஙனன்றியே 'சேஷி உகந்த அடிமையே சேஷபூதனுக்கு ஆதரணீயம்' என்னுமிடத்தை அநுஷ்டித்தார். பெருமாளைப் பிரிந்து தரித்திருக்கமாட்டாமையாகிற தன் செல்லாமையைப் பாராது பெருமாளுடைய திருவுள்ளத்தையே பார்த்துச் சித்திரகூடத்தினின்றும் மகிழ்ச்சியோடே மீண்டாரிறே இவர். ஆகையால் இவர்க்கு விசேஷமுண்டு.

அப்படிப்பட்ட பரதாழ்வானையல்லது வேறொன்று மறியாதேயிருக்கையாலே-பகவச்சேஷத்வ காஷ்டையான பாகவதசேஷத்வத்தை அநுஷ்டித்தார் சத்ருக்நாழ்வான். இந்த சத்ருக்நர்க்கு வால்மீகிமுனிவர் விசேஷணமிடும்போது நித்யசத்ருக்நர் என்றார்:—பாஹ்யசத்ருக்களை மாத்திரமேயன்றி ஆந்தர சத்ருக்களான இந்திரியங்களையும் வென்றிருப்பர் என்று அதற்குப் பொருளுரைத்த பெரியவாச்சான்பிள்ளை, "அவ்விந்திரியஜயத்தின் எல்லை எவ்வளவென்னில்; "ரூபௌதார்யகுணை:—பும்ஸாம் த்ருஷ்டிசித்தாபஹாரிணம்" என்கிற ராமஸௌந்தர்யத்திலும் துவக்குண்ணாதொழிகை. அதாகிறது-பெருமாளைப் பற்றும்போதும் தன் உகப்பாலேயாதல் அவருடைய வைலக்ஷண்யத்தாலே யாதலன்றிக்கே தனக்கு உத்தேச்யனான இவன் [-பரதன்] உகந்தவிஷயம் என்று பற்றுகை." என்றருளிச்செய்தது இங்கு அநுஸந்தேயம்.

அவதாரிகை முற்றிற்று.

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

ஸ்ரீமதுரகவியாழ்வார் அருளிச்செய்த

# கண்ணிநுண் சிறுத்தாம்பு.

---

கண்ணிநுண்சிறுத்தாம்பினால் கட்டுண்ணப்
பண்ணியபெருமாயன் * என்னப்பனில் *
நண்ணித்தென் குருகூர் நம்பியென்றக்கால் *
அண்ணிக்கு மமுதூறும் என்நாவுக்கே. (க)

| | | | |
|---|---|---|---|
| கண்ணி | (உடம்பிலே உறுத்தும்படி பல) முடிகளையுடைத்தாய் | என் அப்பனில் | எனக்கு ஸ்வாமியான ஸர்வேச்வரனைவிட்டு, |
| நுண் | (உடம்பிலே அழுந்தும்படி) நுட்பமாய் | நண்ணி | (ஆழ்வாரைக்) கிட்டி ஆச்ரயித்து |
| சிறு | (எட்டம்போராதபடி) சிறிதாயிருக்கிற | தென்குருகூர் நம்பி என்றக்கால் | தெற்குத் திசையிலுள்ள (ஆழ்வார் திருநகரி யென்னும்) குருகூர்க்கு நிர்வாஹகரான ஆழ்வார் என்று (அவரது திருநாமத்தைச்) சொன்னால் |
| தாம்பினால் | கயிற்றினால் | | |
| கட்டுண்ணப் பண்ணிய | யசோதைப்பிராட்டி தன்னைக்கட்டும்படி பண்ணுவித்துக்கொண்ட | அண்ணிக்கும் | பரமபோக்யமாயிருக்கும்; |
| | | என் நாவுக்கே | என் ஒருவனுடைய நாவுக்கே |
| பெருமாயன் | விசேஷ ஆச்சரிய சக்தியுக்தனாய் | அமுது ஊறும் | அம்ருதம் சுரக்கும். |

ஆழ்வாருடைய ஒப்பற்ற போக்யதையையும், அந்த போக்யதையின் ரஸமறிந்தவர் தாமொருவரே என்பதையும் இப்பாட்டில் அருளிச்செய்கிறார். நம்மாழ்வார், மற்றுள்ள அவதாரங்களிற் காட்டில் க்ருஷ்ணாவதாரத்திலே, அது தன்னிலும் நவநீத சௌர்யம்பண்ணி ஆய்ச்சியர்தாம்பினால் உரலினிடை ஆப்புண்டிருந்த அபதானத்தில் 'எத்திறம்! உரலினோடிணைந்திருந் தேங்கிய எளிவே!" என்று ஆறுமாதம் மோஹித்திருந்தவராதலால், அந்த அபதானத்தை முன்னிட்டுக் கண்ணபிரானைக் கூறுகின்றார்.

தேவுமற்றறியாத ஆழ்வாரைப்பற்றின இவர் முதலடியிலே பகவத் விஷயத்தில் இறங்குவானேன்? அதிலும் என் அப்பன் என்று பரமோத்தேச்யனை தோற்றச் சொல்லுவானேன்? என்னில்; ஆழ்வார் ஆழங்காற்பட்ட துறை என்பதுபற்றியும், ஆழ்வார் உகந்த விஷயத்தைப் பேசினால் அவர்க்கு முகமலர்த்தி உண்டாகுமென்பது பற்றியும் பேசுகிறார். மேலும் சரமபர்வநிஷ்டர்க்கு பகவத்விஷயம் ஸர்வாத்மநா அநுத்தேச்யமுமன்று; தாமாக ஸாக்ஷாத்

பகவத்விஷயத்தைப் பற்றக்கூடாதேயொழிய, தமது ஆசிரியர் உகந்தவிஷயமென்று அவ்வழியாலே பற்றுகை விருத்தமன்று. மேலும் இப்பாட்டில் எம்பெருமானைவிட்டு ஆழ்வாரைப்பற்றி மகிழ்ந்தவாறு கூறுகின்றதேயன்றி, பகவத்விஷயத்தைப் பற்றுவதாகக் கூறப்படவுமில்லை. முதலடியிலே எம்பெருமானைப் பேசியதனாலும், அதிலும் எம்பெருமானுக்கு இட்ட விசேஷணங்களின் வைலக்ஷண்யத்தாலும் ஆபாததः தோற்றக்கூடிய சங்கையை அநுவதித்துப் பரிஹரித்ததித்தனை.

என் அப்பனில்—என் அப்பனைவிட்டு என்றபடி. வடநூலார் 'ல்யப்லோபே பஞ்சமீ' என்பர்; "வ்ருக்ஷாத்பர்ணம் பததி" என்றவிடத்து 'வ்ருக்ஷாத்' என்ற பஞ்சமியானது 'வ்ருக்ஷம் விஹாய' என்ற ஸ்தாநத்திலேயாமென்று உதாஹரணமுங் காட்டுவர்; அதுபோல் இங்குக்கொள்க.

கண்ணபிரான், வெண்ணெய் களவுசெய்கிற தன்னை யசோதைப்பிராட்டி அடிக்கடி தாம்பினால் கட்டி வருத்துகின்றாளென்று வீட்டிலுள்ள கயிறுகளைத் துண்டுதுண்டாக அறுத்து வைத்திடுவான்; அவற்றை அவள் ஒன்றோடொன்று முடிபோட்டு ஒரு கயிறுவடிவமாக்கி அதுகொண்டு கண்ணபிரானைக் கட்டுவள்; ஆனதுபற்றித் தாம்புக்குக் **கண்ணி** என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது. **நுண் சிறு** என்ற அடைமொழிகள் தாம்பின் சுற்றளவிலும் நீட்டளவிலுமுள்ள சிறுமையைக்கூறும்; மெல்லிதாய்க் குறுகிய என்றபடி. இப்படிப்பட்ட தாம்பினால் கட்டும்போது, தன் உடம்புக்கு எட்டம் போராதபடி மிகச்சிறிதான அத்தாம்பினால் கட்டமுடியாதபடி எளிதில் தன்னைத் தப்புவித்துக்கொள்ள வல்லவனாயினும், தனது ஸௌசீல்யம் ஸௌலப்யம் ஆச்ரித பாரதந்திரியம் முதலிய சீலங்களை வெளியிடுவதற்கென்றே பரத்வநிலையைத் தவிர்ந்து மநுஷ்ய ஸஜாதியனாக அவதரித்திருக்கிற தான் உரலோடு கட்டுண்டிருக்கை முதலிய இவ்வகைகளால்தான் அக்குணங்களை விளங்கச்செய்து கொள்ளவேணுமென்று கொண்டு, ஒரு சுற்றுக்குப் போராத தாம்பு இரண்டு மூன்று சுற்றுக்குப் போரும்படி உடம்பைச் சுருக்கி அமைத்துக்கொண்ட அற்புதம் **கட்டுண்ணப்பண்ணிய** என்ற சொல் நயத்தாற் போதரும். "கட்டுண்ட" என்னாது கட்டுண்ணப்பண்ணிய என்றது—தன்னைக் கட்டுவதற்குத் தானே இசைந்து போந்தமையை நன்கு காட்டவற்றென்க.

இங்கு நஞ்சீயருளிச்செயல்—"ஆச்ரிதர் கையாலே கட்டுண்ணாவிடில் சீலத்துக்குப் போராது. அநாச்ரிதரைக் * கட்டாவிடில் ப்ரபாவத்துக்குப் போராது. ராஜாவானவன் எதிரிகளைக் கட்டிவைக்கையும் பும்ஸ்த்வம்; தன் மஹிஷியின் கையில் பூமாலையாலே கட்டுண்டு கிடக்கையும் பும்ஸ்த்வம்."

பரம்புருடன் கர்மவச்யனான ஸம்ஸாரியைப்போற் பிறந்தவாறும், பசியுண்டாகி நவநீதம் முதலியவற்றை விரும்பியவாறும், அவற்றை இடுவாரில்லாமல் களவுவழியிலே பெறுகையும், அவற்றைச் சடக்கென விழுங்கிவிட்டு

* ஸம்ஸாரபந்தத்திலே அழுந்தச்செய்யாவிடில் என்றபடி.

மறைத்துக்கொள்ளமாட்டாமல் வாயது கையதாக அகப்பட்டுக்கொள்கையும்,
இடக்கை வலக்கை யறியாதவர்கள் கையாலே கட்டுண்கையும், ஸம்ஸாரபந்தங்
களையெல்லாம் தவிர்க்கவல்லவனை தான் இந்த பந்தகத்தைத் தவிர்த்துக்
கொள்ள மாட்டாதவனாகி ஏங்கியேங்கி அழுகையுமாகிற இவையெல்லாம் என்ன
ஆச்சரியம்! என்பார் பெருமாயன் என்கிறார். இவனுடைய மேன்மைக்கு எல்லை
காண முடியுமாகிலும் நீர்மைக்கு எல்லைகாண முடியாதென்ப.

[என் அப்பனில்.] நஞ்சீயருரை:—"கீழ் ஆசார்யருசி பரிக்ருஹீதமான
அர்த்தமாகையாலே க்ருஷ்ணவ்ருத்தாந்தம் சொல்லிற்று; மேல் உத்தேஸ்ய
மான (ஆழ்வார்) விஷயத்தைச்சொல்லாதே அவனை என்னப்பனென்பானென்?
என்னில்; தம்மை ஆழ்வார் அங்கீகரிக்கைக்காக எம்பெருமானோடு தமக்கொரு
ஸம்பந்தம் சொல்லிக்கொள்ளுகிறார். ஒருருக்குப் போம்போது வழியிடை
யிலே 'நீரும் நிழலும் நன்றாயிருந்தது' என்று ஒதுங்கினால் உத்தேஸ்யமாக
வேணுமோ?".

பகவத் விஷயத்தைவிட்டு ஆழ்வாரைப்பற்ற வேண்டியதுமில்லை; ஆழ்வார்!
என்று ஒருகால் வாயினாற்சொன்னாலும் போதும் என்பார் என்றக்கால் என்
கிறார். அண்ணிக்கும்—தித்திக்கும் என்றபடி. ஆழ்வார்க்கு நிரந்தர பகவத்
விஷயாநுபவத்தாலே பிறந்த ஆநந்தாதிசயமடங்கலும் இவர்க்கு ஆழ்வாரை
ஒருகால் சொன்னமாத்திரத்திலே உண்டானபடி.

"அண்ணிக்கும் அமுதூறும்" என்று இவர் சொன்னவுடனே, கருவிலே
திருவிலாதார் சிலர் 'எங்களுக்கு ஆழ்வார் ரஸிக்கவில்லையே' என்ன; என்
நாவுக்கே என்கிறார்; முதலடியான பகவத்விஷயமுங்கூட ரஸியாதிருக்கிற
உங்களுக்கு, சரமாவதியான ஆழ்வாரளவும் ரஸிக்கும்படியான எனக்கு ரஸிக்
குமாபோலே ரஸிக்குமோ? என்கை. அன்றியே என் நாவுக்கே என்றது—
அநாதிகாலமாக விஷயாந்தரங்கள் ரஸித்துக்கிடந்த என்னுடைய நாவுக்கே
இன்று ஆழ்வாரென்றால் ரஸித்திருக்கும்படி என்னபாக்கியம்! என ஈடுபடுகிற
படியுமாம். ... ... ... ... (க)

நாவினால்நவிற்றி இன்பமெய்தினேன் *
மேவினேன் அவன்பொன்னடிமெய்ம்மையே *
தேவுமற்றறியேன் குருகூர்நம்பி * (உ)
பாவினின்னிசை பாடித்திரிவனே.

| | | | |
|---|---|---|---|
| நாவினால் | நாக்கினால் | பொன் அடி | அழகிய திருவடிகளை |
| நவிற்றி | (ஆழ்வாரை) ஸ்தோத்திரம் பண்ணி | மேவினேன் | ஆச்ரயிக்கப்பெற்றேன்; |
| இன்பம் எய்தினேன் | ஆநந்தத்தைப்பெற்றேன்; | மெய்ம்மையே | இது ஸத்தியமே; |
| அவன் | அவ்வாழ்வாருடைய | மற்று தேவு அறியேன் | (ஆழ்வாரையொழிய) வேறொரு தெய்வத்தை அறியமாட்டேன்; |

| | | | |
|---|---|---|---|
| குருகூர் நம்பி | திருநகரிக்கு நிர்வாஹகரான அவ்வாழ்வாருடைய | இன் இசை | இனிய இசையையே |
| | | பாடி | பாடிக்கொண்டு |
| பாவின் | அருளிச்செயல்களின் | திரிவன் | திரியக்கடவேன். |

தம்முடைய மநோவாக்காயங்களென்ற மூன்று கரணங்களும் ஆழ்வார் விஷயத்திலேயே ஏகாக்ரமாக ஈடுபட்டபடியை அருளிச்செய்கிறார் இதில். நான் என்னுடைய நாக்கைக்கொண்டு அப்ராப்தமான பகவத் விஷயத்திலே செலுத்தாமல் ப்ராப்தசேஷியான ஆழ்வாரைத் துதிப்பதிலே செலுத்திப் பரமாநந்தமடைந்தேன்; என் தலை படைத்த ப்ரயோஜநம் பெறும்படி தலையை ஆழ்வார் திருவடிகளிலே மடுத்தேன்; இது ஸத்யம்.

தேவுமற்றறியேன் என்பதனால் நெஞ்சின் காரியஞ் சொல்லுகிறார்; நம்மாழ்வாரையொழிய வேறொருவரைத் தெய்வமாக நினைக்கமாட்டாது என்மனம்; நம்மாழ்வாரையே பரதேவதையாகக்கொண்டேன் என்கிறார். முதலடியிலே சொன்ன நாவின் காரியத்தை மீண்டும் விசேஷித்துக் கூறுகிறார்—குருகூர் நம்பி இத்தியாதியால். எப்போதும் நம்மாழ்வாருடைய திவ்ய ப்ரபந்தங்களையே இனிய இசையுடன் பாடிக்கொண்டு திரிவேனேயன்றி, அவ்வருளிச்செயலைத்தவிர்த்து ஸத்யாவத்தக மந்த்ரத்தையும் இந்த நாக்கினால் உச்சரிக்கமாட்டேன் என்கிறாராகக்கொள்க.

இங்கே ஒரு சங்கை பிறக்கக்கூடும்; அதாவது—"தேவுமற்றறியேன்" என்று இவர் எம்பெருமானை ஒதுக்கித் தள்ளுகிறபடியானால் அவ்வெம்பெருமானை தெய்வமென்று கொண்டாடுகிற அருளிச்செயல் மாத்திரம் இவர்க்கு உபாதேயமாகலாமோ? பகவத்விஷயத்தை உதறிவிட்டு ஆழ்வாரையே பற்றினவிவர் அந்த ஆழ்வாருடைய பெருமையைப் பேசவல்ல பிரபந்தத்தையேயன்றோ பாடிக்கொண்டு திரியவேணும்—என்று. இச்சங்கைக்கு முதற்பாட்டின் உரைத்தொடக்கத்திலேயே ஸமாதாநங் கூறப்பட்டுள்ளமை காண்க. சரமபர்வநிஷ்டர்க்கு பகவத்விஷயம் ஸர்வாத்மநா ஹேயமன்று; தம் ஆசிரியர் உகந்த விஷயமென்று அவ்வழியாலே பற்றுகை ஸ்வரூபாநுரூபமென்றும் ஸ்வேச்சையாலே பற்றுகை விருத்தமென்றும் இவ்வளவேயுள்ளது.

இங்கு, "குருகூர்நம்பி பாவைப்பாடித்திரிவன்" என்னாமல், 'பாவின் இன்னிசை பாடித்திரிவன்' என்றதற்கு ஸ்வாரஸ்யமாக நஞ்சீயரருளிச் செய்யும்படி:—ஐச்வர்யத்தை அல்பாஸ்திரமென்று கழித்து, ஸ்திரமான ஆத்மப்ராப்தியை அபுருஷார்த்தமென்று கழித்து, ஸ்திரமுமாய்ப் பரமபோக்யமுமான பகவத் ப்ராப்தியை ப்ராப்யத்தில் ப்ரதமாவதியென்று கழித்து, இதில் சரமாவதியான ஆழ்வாரையும் உத்தேச்யரன்றென்று கழித்து, அவரோடு ஸம்பந்தித்த விஷயத்தையும் ரஸாச்ரயமன்றென்று கழித்து, அத்தோடு ஸம்பந்தித்த இசையே தமக்கு உத்தேச்யமென்கிறார். 'தெய்வத்தண்ணந் துழாய்த்தாராயினுந் தழையாயினும் தண்கொம்பதாயினுங்கீழ்வேராயினும் நின்ற மண்ணாயினுங்

கொண்டு வீசுமினே’ இத்தியாதியிற்படியே பகவத்ஸம்பந்தம் கழியக்கழிய நிறம் பெறுகிறபடி.”

பாடித்திரிவனே என்ற சொல்நயத்தால், ஆழ்வாரருளிச்செயலைப் பாடவே தான் எனக்கு உடம்பில் வலிவு உண்டாகி ஸஞ்சரிக்கவல்லசக்தி உண்டாகிறது என்னுங்கருத்துத்தோன்றும். “ஸாயநஸேவை பண்ணித்திரிவாரைப்போலே; இதுகாணும் இவர்க்கு தாரகமாய் இவரை ஸஞ்சரிக்கப் பண்ணுகிறது ”

“நாவாயிலுண்டே நமோநாரணவென்று ஓவாதுரைக்கு முரையுண்டே” என்றும், “என் நாவிலின்கவி யாதொருவர்க்குங் கொடுக்கிலேன்” என்றும் மற்றையாழ்வார்கள் பகவத்விஷய ஸ்துதியையே தமது நாவுக்குப் பயனாக நினைத்திருப்பர்; “அடியையடைந் துள்ளந்தேறி, ஈறிலின்பத் திருவெள்ளம் யான் மூழ்கினன்” என்று பகவத்விஷயாவகாஹநத்தையே தமக்குப் பேரின்பமாக நினைத்திருப்பர்; “கோலமாமென் சென்னிக்கு உன் கமலமன்ன குரைகழலே” என்று பகவத் பாதஸேவையையே தமது தலைக்குப் பேறாக நினைத்திருப்பர்; “கண்ணனல்லால் தெய்வமில்லை” என்று அவனையே தெய்வமாக நினைத்திருப்பர்; இந்த ப்ரதிபத்திகளெல்லாம் மதுரகவிகளுக்கு ஆழ்வார்திறத்திலே யாமென்பதை இப்பாட்டில் உய்த்துணர்க.

நம்பிள்ளை யீடு:—“‘குருகூர்நம்பிபா’ என்றது—கண்ணிநுண் சிறுத்தாம்பென்னுதல்; திருவாய்மொழி என்னுதல். திருவாய்மொழி தன்னில் பலகாலும் ‘குருகூர்ச்சடகோபன்’ என்றாரிறே; அவ்வழியாலேயாய்த்துத் திருவாய்மொழி தன்னையும் இவர் ஆதரிப்பது.”

மெய்ம்மையே=‘ஆழ்வார் நீசஜாதியிற் பிறந்தவராதலால் அர்ச்சையில் அவர் ஆதரிக்கத்தக்கவரேயன்றி விபவத்தில் ஆதரிக்கத்தக்கவரல்லர்; [“ஸ்ரீயதி-ஞாஜநந்த்ராதிவ.”] மாதா புத்திரனுக்கு நமஸ்காரணீயையாயினும் பஹிஷ்டையாயிருக்குங்காலத்திலே அவள் எப்படி நமஸ்கரிக்கத்தகாதவளோ அப்படி தான் நீசஜாதீயரான ஆழ்வார்கள் விபவத்திலே அநாதரணீயர்’ என்று பிதற்றும் த்ரமிடோபநிஷத்குத்ருஷ்டிகளின் மிடற்றைப் பிடித்தாற்போலே அருளிச்செய்கிறபடிபாரீர். மதுரகவிகள் ப்ராஹ்மணோத்தமராயிருந்துவைத்து, ஆழ்வாருடைய விபவதசையிலே அவர்க்கு நான் ஸகலவித பரிசர்யையும் செய்தேன் காண் என்று ஸத்யம்பண்ணிச் சொல்லுகின்றார் காண்மின்.

“நவிற்றின்பம்” என்று பெரும்பாலும் ஓதப்பட்டாலும் “நவிற்றியின்பம்” என்ற பிராசீந பாடத்தை ஆதரிப்பதே அழகு; கலிவிருத்தத்தால் அமைந்த இப்பிரபந்தம்-நேரசைமுதலாகத் தொடங்கப்பட்ட பாட்டுகள் ஒற்றொழித்துப் பதினோரெழுத்துக்கொண்ட அடியையுடையனவாகவும், நிரையசை முதலாகத் தொடங்கப்பட்ட பாட்டுக்கள் ஒற்றொழித்துப் பன்னிரண்டெழுத்துக்கள் கொண்ட அடியையுடையனவாகவும் அமைந்திருக்கும் முறைமைக்கிணங்க நவிற்றி என்றிருக்கவேணுமென்க. நவிற்று என்றால் பத்தெழுத்தாய்விடுமன்றோ. ‘நவிற்று’ என்ற பாடத்தில், நவில் பகுதி; ‘நவிற்றி’ என்ற பாடத்தில், நவிற்று பகுதி: பொருள் ஒன்றே. ... ... .... (உ)

திரிதந்தாகிலும் தேவபிரானுடை *
கரியகோலத் திருவுருக்காண்பன்நான் *
பெரியவண்குருகூர் நகர்நம்பிக்காள்
உரியனாய் * அடியேன்பெற்றநன்மையே. (௯)

| | |
|---|---|
| திரி தந்தாகிலும் | (பகவத்விஷயத்தோடு ஒட்டற்றுத்) திரிந்தேனாகிலும் |
| தேவ பிரானுடை | நித்ய ஸூரிகளுக்குத் தலைவனான எம்பெருமானுடைய |
| கரிய | (நீலமேகம்போற்) கறுத்ததாய் |
| கோலம் | அழகியதான |
| திரு உரு | பிராட்டியோடு கூடிய திவ்ய ரூபத்தை |
| நான் காண்பன் | நான் ஸேவிப்பேன்; |
| பெரிய வண் குருகூர் நகர் நம்பிக்கு | பெருமையையும் ஔதார்யமுமுடைய ஆழ்வார்க்கு |
| உரிய ஆள் ஆய் | அநந்யார்ஹ சேஷபூதனாயிருந்துவைத்து |
| அடியேன் பெற்ற நன்மை | அடியேன் பெற்றபேறு இது காணீர். |

"தேவுமற்றறியேன்" என்றார் கீழ்ப்பாட்டில்; இதில் தேவுமற்று அறிவேன் என்கிறார். ஆழ்வார்பற்றின விஷயமென்று அவ்வழியாலே பற்றலாகும் என்கிற சாஸ்த்ரார்த்தத்தை விளக்குகிறபடி. "விட்டுசித்தர் தங்கள் தேவரை வல்லபரிசு வருவிப்பரேல் அது காண்டுமே" என்றாளிறே ஆண்டாளும். ஆனையின்மேலே ஏற நினைப்பார் தாமாக ஏறப்புக்கால் உதைபடுவர்; விரகறிந்த பாகன் மூலமாக ஏறினால் அது முறைமையாகும்; அப்படியேயாய்த்து பகவத்விஷயப்பற்றும்.

"திரிதந்தாகிலும்" என்றதைத் "திரிதந்தேனாகிலும்" என்பதன் மரூஉமொழியாகக்கொண்டு உரைக்கப்பட்டது. அன்றி, வினையெச்சமாகவே கொண்டு உரைத்தலுமொன்று. திரிதருதலாவது திரும்பிவருதலாய், எம்பெருமானை விட்டு ஆழ்வாரளவும் போன நான் திரும்பி எம்பெருமானளவிலே வந்தாகிலும் என்றும் திருவாய்மொழிப் பாவைவிட்டு இசைகளைவிட்டு ஆழ்வாரையும் விட்டு 'அவருகந்த விஷயம்' என்று ப்ரதமபர்வத்திலே திரும்பிவந்தாகிலும் என்றபடி.

"திரிதந்தாகிலும் தேவபிரானுடைக் கரியகோலத் திருவுருக் காண்பன் நான்" என்றவாறே, சிலர் மதுரகவிகளைநோக்கி "என்சொன்னீர்! என்சொன்னீர்? விட்டொழிந்த படுகுழியில் மீண்டும் விழுந்தீரே" என்றுகூற, பின்னடிகளால் அவர்கட்கு உத்தரம் அருளிச்செய்கிறார். தேவபிரானுருவை நான் காண்பதானது என்னுடைய முயற்சி மூலமாக நேர்ந்ததாகில் எனக்கு இது தீமையேயாகும்; ஆழ்வார் திருவடிகளிலே நான் அடியனாயிருந்துவைத்து அவர் வழியாலே பெற்றதாகையால் இது நன்மையேயாம் என்றவாறு.

"தேவபிரானுடைக் கரியகோலத் திருவுருவைத் திரிதந்து நான் காணபனாகிலும் (அது) பெரியவண்குருகூர் நகர்நம்பிக்கு அடியேன் ஆளுரியனாய்ப் பெற்ற நன்மையாகுமேயன்றித் தீமையாகாது" என்றுமாம். ... (௯)

நன்மையால்மிக்க நான்மறையாளர்கள் *
புன்மையாகக் கருதுவராதலில் *
அன்னையா யத்தனாய் என்னையாண்டிடும்
தன்மையான் * சடகோப னென்னம்பியே. (௪)

| | | | |
|---|---|---|---|
| நன்மையால் மிக்க | நற்குணத்தால் மேன்மை பெற்றவர்களாய் | அன்னை ஆய் | மாதாவாயும் |
| நால் மறை ஆளர்கள் | நான்கு வேதங்களிலும் வல்லவர்களான வைதிகர்கள் | அத்தன் ஆய் | பிதாவாயும் |
| (என்னை) | அடியேனை | என்னை ஆண்டிடும் தன்மையான் | அடியேனைக் கைக்கொண் டருளு மியல்வினரான |
| புன்மை ஆக கருதுவர் ஆதலில் | ஹேயகுணங்களே ஒரு வடிவுகொண்டதென் றெண்ணி உபேக்ஷித் திருப்பரென்பதுவே ஹேதுவாக | சடகோபன் | நம்மாழ்வார் |
| | | என் நம்பி | எனக்குத் தலைவர். |

முதற்பாட்டில் எம்பெருமானைவிட்டு ஆழ்வாரையேபற்றினதாகக்கூறின நீர் 'ஆழ்வாருகந்தவிஷயம்' என்பதுபற்றி பகவத்விஷயத்தை விரும்புவானேன்? ஆழ்வார் உகந்தால் நீரும் உகக்கவேணுமோ? என்று சிலர் கேட்க; ஸகல வைதிகர்களாலும் 'இது அபதார்த்தம்' என்று கைவிடப்பட்ட அடியேனை யாவரொரு ஆழ்வார் விசேஷமாகக் கடாக்ஷித்தருளி ஸகலவித பந்துக்களும் செய்யக்கூடிய காரியத்தைத் தாமொருவராகவே அடியேன் திறத்துச் செய்தருளிப் பொருளல்லாத வென்னைப் பொருளாக்கியருளினாரோ அவ்வாழ்வாரன்றோ எனக்குத் தலைவர்; அவர் உகந்தவிஷயத்தை நான் உகவா தொழிந்தேனாகில் ஆழ்வார் என்னை அங்கீகரித்தருள்வதற்கு முன்பு நான் நின்றநிலைக்கும் இப்போதைய நிலைமைக்கும் என்ன வாசி உள்ளதாம்? என்ற கருத்துத்தோன்ற அருளிச்செய்கிறார்.

[நன்மையால் மிக்க.] என்னை இகழ்ந்து கைவிட்டவர்கள் ஸாமாந்ய புருஷர்களல்ல; நன்மையால்மிக்க நான்மறையாளர்களாய்த்துக் கைவிட்டது; அதாவது—ஒருவனிடத்தில் சில குணங்களும் சில தோஷங்களுங்கிடந்தால் தோஷாம்சங்களைத் தள்ளிவிட்டுக் குணபாகங்களையே நோக்கிக் கைக்கொள்ளுதல், ஸ்வல்ப குணமுமில்லாமல் தோஷங்களே கூடு பூரித்துக்கிடந்தாலும் அக்குற்றங்களையே நற்றமாகக்கொண்டு கைக்கொள்ளுதலாகிற நன்மையிற் சிறந்தவர்களாய்; இவ்வளவு ஆத்மகுணபூர்த்தி உண்டாவதற்கீடாக நான்கு வேதங்களிலும் வ்யாஸபதம் செலுத்த வல்லவர்களான பெரியோர்களுக்கும் தமது நன்மையைக்கொண்டு என்னைக் கைக்கொள்ள முடியாதபடி மஹாபாபியாய்க் கிடந்தேனென்று இவ்வளவையே காரணமாகக்கொண்டு ஆழ்வார் கடாக்ஷித்தருளினார் என்கை. "நன்மையால்மிக்க நான்மறையாளர்" என்ப

தற்குப் பொருந்தியவர் கூரத்தாழ்வான் ஒருவரே என்று நம்முதலிகள் அனைவரும் ஒருமிடறாக அருளிச்செய்வர்களாம். கூரத்தாழ்வான் இகழ்ந்து கைவிடும்படியான ஜந்து உலகத்திலேயே கிடையாது; அப்படிப்பட்ட கூரத்தாழ்வாலும் இம்மதுரகவிகளைக்கண்டால் விலக்கித் தள்ளும்படியாக அத்தனை ஹேயவஸ்துவாய்த் தாமிருந்ததாக நைச்யாநுஸந்தானம் பண்ணிக்கொள்ளுகிறபடி.

[புன்மையாகக்கருதுவர்.] புன்மை என்பது பண்புப்பெயர் (தர்மம்;) புல்லியன் என்பது பண்பி (தர்மி); புல்லியன் [-க்ஷுத்ரன்] என்று என்னைக் கருதுவர் என்னவேண்டியிருக்கப் 'புன்மையாகக் கருதுவர்' என்றது—புன்மை என்று வேறொரு ஆதேயவஸ்துவும் புல்லியன் என்று வேறொரு ஆதாரவஸ்துவும் கிடையாது; புன்மையே மதுரகவியாக ஒரு உருவை யெடுத்துக்கொண்டு வந்திருக்கின்றதென்று கருதுவர் என்றபொருள் தோன்றுவதற்காம். இவ்விடத்தில் விவக்ஷிதமான புன்மை மேற்பாட்டில் விசதம்.

கருதுவர் = காலவழுவமைதி; "விரைவினு மிகவினுந் தெளிவினுமியல்பினும், பிறழவும் பெறூஉமுக் காலமுமேற்புழி" என்பது நன்னூல்.

ஆதலில் = அனைவருங் கைவிட்டதுதானே ஹேதுவாக என்றபடி. 'இனி இம்மதுரகவிக்கு நாமல்லது ரக்ஷகரில்லை' என்று தம்முடைய க்ருபாமாத்ரப்ரஸந்நாசார்யத்வத்தை வெளியிட்டுக்கொண்டு என்னை ஆண்டாரென்கிறார். நான்வேறு போக்கடியற்று 'ஆழ்வார் திருவடிகளே சரணம்' என்று அடைக்கலம் புகுந்த பின்பு ஆழ்வார் என்னை ஆண்டருளினாராகில் அதற்கு நான் அவ்வளவாக உருக மாட்டேன்; என்னுடைய இசைவு இல்லாதிருக்கவும் தாமே என்னுடைய புகலறுதியைப் பார்த்துக் கைக்கொண்டருளின க்ருபாதிசயம் என்னை உருக்காநின்றதென்கிறார்.

நெருப்புக்கு உஷ்ணம்போலவும் நீர்க்குச் சீதளம்போலவும் ஆழ்வார்க்கு இக்குணம் இயற்கையானது என்னுங் கருத்துத்தோன்ற 'ஆண்டிடுந் தன்மையான்' என்ற சொல்லழகு நோக்குமின். ... ... (௭)

நம்பினேன் பிறர்நன்பொருள் தன்னையும் *
நம்பினேன் மடவாரையும் முன்னெலாம் *
செம்பொன்மாடத் திருக்குருகூர்நம்பிக்கு
அன்பனாய் * அடியேன் சதிர்த்தேனின்றே. (௮)

அடியேன் — (இன்று 'அடியேன்' என்று சொல்லும்படி திருந்தின) நான்
முன் எலாம் — (ஆழ்வாருடைய விஷயீகாரம் பெறுவதற்கு) முன்பெல்லாம்

பிறர் — அயலாருடைய
நல் பொருள் தன்னையும் — நல்ல பொருள்களை
நம்பினேன் — ஆசைப்பட்டுக் கிடந்தேன்;
(பிறர்) மடவாரையும் — பிறருடைய ஸ்த்ரீகளையும்

| | |
|---|---|
| நம்பினேன் | விரும்பிப்போந்தேன் ; |
| இன்று | இப்போதோவென்றால் |
| செம் பொன் மாடம் | செவ்விய பொன்னால் சமைந்த மாடங்களையுடைய |
| திருக்குருகூர் நம்பிக்கு | திருநகரிக்குத் தலைவரான ஆழ்வார்க்கு |
| அன்பன் ஆய் | பக்தனாகப்பெற்று |
| சதிர்த்தேன் | சதிரையுடையேனானேன் [சமர்த்தனாய்விட்டேன்.] |

வஸ்துக்கள் உம்மைக் கைவிடப்படி உம்பக்கல் என்ன புன்மையிருந்ததென்ன ; அநாதிகாலமாகப் பரத்ரவ்யாபஹாரமும் பரதாரபரிக்ரஹமும் பண்ணிப்போந்தேன் என்று முன்னிரண்டடிகளாற் கூறியபின்னர், 'இப்போது எப்படியிருக்கிறீர்?' என்றுகேட்க, இப்போது ஆழ்வாருடைய அருளுக்கு இலக்காகப்பெற்றுச் சதிரனாய்விட்டேன் என்கிறார் பின்னிரண்டடிகளால்.

முதலடிக்கு—அயலாருடைய பொருள்களைக் களவுசெய்தேன் என்று ஸாமாந்யமாகப் பொருளாயினும் நன்பொருள் என்ற ஸ்வாரஸ்யத்தால் இங்கு ஆத்மாபஹாரம் பொருளாகக்கடவது. ஈச்வரனுக்கு சேஷபூதமான விலக்ஷண ஆத்மவஸ்துவை யென்னுடையதாக அபிமானித்திருக்கையாகிற ஆத்மாபஹாரக் களவைச் செய்துபோந்தேன்என்கை. "[illegible] ஆத்மாபஹாரிணா—யோந்யதா ஸந்தமாத்மாநமந்யதா ப்ரதிபத்யதே। கிம்தேந நக்ருதம் பாபம் சோரேணாத்மாபஹாரிணா" என்றதை இங்கு அநுஸந்திக்க.

"[illegible]—உத்தம: புருஷஸ்த்வந்ய:" என்கிற ப்ரமாணச்சாயையாலே எம்பெருமானைப் பிறர் என்கிறது. இப்படி ஆத்மாபஹாரம் பண்ணினேனாகையால் அதற்குப் பலமான விஷய ப்ராவண்யப் படுகுழியிலே விழுந்தேனென்கிறார் இரண்டாமடியில் ; பகவத் பாகவதவிஷயத்திலே வைக்கவேண்டிய மஹாவிச்வாஸத்தை மின்னிடை மடவார்திறத்திலே வைத்தேனென்கிறார்.

நம்பிள்ளை ஈடு:—"ரத்நாபஹாரம்பண்ண அஞ்சாதவன் விறகும் வைக்கோலும் களவுகாண அஞ்சுமோ? ஈச்வரன் 'என்னுடையது' என்று அபிமானித்திருந்த (ஆத்ம) வஸ்துவை அபஹரித்தவன், ஸாமாந்யர் 'என்னது' என்று அபிமானித்திருக்கும் * வஸ்துவை அபஹரிக்கச் சொல்லவேணுமோ?"

நம்புதல்—விரும்புதல் ; "நம்பும் மேவும் நசையாகும்மே."

இப்படியிருந்த நீர் ஆழ்வாரைக்கிட்டினபடி எங்ஙனே? என்று கேட்க ; மடவார்களை ஆராதிப்பதற்காகப் பொருள்தேடிக் கொள்ளையடிப்பதற்கு இடம் பார்த்துத் திரியாநிற்கையில் அச்செம்பொன் மாடத்தைக் களவுகாணப் போனேன் ; அங்கே வைத்தமாநிதியைக்கண்டு அகப்பட்டேனென்கிறார் ; இவர்க்கு வைத்தமாநிதி ஆழ்வாரேயாம்.

சதிர்த்தேன்—க்ருதக்ருத்யனானேன் என்றபடி. சதுர என்ற வடசொல் சதிர் எனத்திரிந்து அது அடியாகப்பிறந்த வினைமுற்று இது. (௫)

* பரஸ்த்ரீகளை என்றபடி.

இன்றுதொட்டுமெழுமையுமெம்பிரான் *
நின்றுதன்புகழேத்தவருளினான் *
குன்றமாடத் திருக்குருகூர்நம்பி *
என்றுமென்னை யிகழ்விலன்காண்மினே. (௬)

| | |
|---|---|
| இன்று தொட்டும் | இன்றுமுதலாக |
| எழுமையும் | மேலுள்ளகாலமெல்லாம் |
| நின்று | (நான்) அத்யவஸாயம் நிலைக்கப்பெற்று |
| தன் புகழ் | தம்முடைய (ஆழ்வாருடைய) திருப்புகழ்களை |
| ஏத்த | துதிக்கும்படி |
| எம்பிரான் அருளினான் | எம்ஸ்வாமியான ஆழ்வார் க்ருபைபண்ணினார்; |
| குன்றம் மாடம் | மலைபோன்ற மாடங்களையுடைய |
| திரு குருகூர் நம்பி | திருநகரிக்குத் தலைவரான அவ்வாழ்வார் |
| என்றும் | (இனி) எக்காலத்திலும் |
| என்னை | என் விஷயத்தில் |
| இகழ்வு இலன் | அநாதரமுடையவராக இருக்கமாட்டார்; |
| காண்மின் | (இதனை அநுபவத்தில்) கண்டுகொள்ளுங்கள். |

“சதிர்த்தேனின்றே” என்று பரமாநந்தமாக அருளிச்செய்த மதுரகவிகளை நோக்கி ‘நீர் சதிர்த்தபடி என்?’ என்று கேட்க, இன்றுமுதலாக இனி மேலுள்ள காலமெல்லாம் ஆழ்வாருடைய திவ்யகுணங்களையே நான் பாடித் திரியும்படி அவ்வாழ்வாரால் க்ருபை பண்ணப்பெற்றேன்; இவ்வளவேயுமன்றி, ஒருகால் நான் ஆழ்வாரை இகழ்ந்தாலும் அவர் என்னை இகழமாட்டாரென்னும்படி அவ்வளவு பரமக்ருபைக்குப் பாத்திரமாயினேனே! இதற்கு மேற்பட்ட சதிர் உலகத்திலுண்டோ? என்கிறார்.

பகவத்விஷயத்தை ஆச்ரயிப்பது ஒருகாலமும், பலன் கைகூடுவது வேறொரு காலமுமாயிருக்கும்; அதுபோலன்றியே ஆழ்வாரை ஆச்ரயித்த இன்றுமுதலாகவே எனக்குப் பலன் கைகூடிற்றுக் காண்மின் என்பார் இன்றுதொட்டும் என்கிறார். எழுமையும்-எழு ஜந்மங்களிலும் என்றது உபலக்ஷணமாய் மேலுள்ள காலமெல்லாம் என்றபடி. இகழ்விலன்—இனி நான் வேறொருவரைத் தேடி ஓடும்படி என்னை இனி எக்காலத்தும் ஆழ்வார் கைவிடமாட்டார் என்கை. காண்மினே-இது ப்ரத்யக்ஷமாகக் காணக்கூடியதாயிருக்க ஆழ்வார் பெருமையை நான் சொல்லக் கேட்கை மிகையன்றோ? ... ... ... (௬)

கண்டுகொண்டென்னைக் காரிமாறப்பிரான் *
பண்டைவல்வினை பாற்றியருளினான் *
எண்டிசையுமறியவியம்புகேன் *
ஒண்டமிழ்ச் சடகோபனருளையே. (௭)

# எ. கண்டுகொண்டென்னை

| | |
|---|---|
| பிரான் | பூர்வோபகாரகராய் |
| காரி மாறன் | பொற்காரியார் திருக்குமாரரான நம்மாழ்வார் |
| என்னை | (தமது பெருமையை அறியாத) என்னை |
| கண்டு | கடாக்ஷித்து |
| கொண்டு | கைக்கொண்டு |
| பண்டை வல் வினை | அநாதியாய்ப் பிரபலமாயிருந்த பாவங்களை |

| | |
|---|---|
| பாற்றி அருளினான் | உருமாய்ந்து போம்படி பறக்கடித்தருளினார்; (ஆதலால்) |
| ஒண் தமிழ் சடகோபன் அருளையே | அழகிய தமிழ்க்கவிகளுக்கு ஆகரமான அவ்வாழ்வாருடைய க்ருபையையே |
| எண் திசையும் | எட்டுத்திக்கிலுள்ளவர்களும் |
| அறிய | அறியும்படி |
| இயம்புகேன் | சொல்லக்கடவேன். |

ழிப்பாட்டில் "நன்புகழ்முத்தவருளினன்" என்றவிடத்துக் கூறிய புகழேத்துகையாவது இதுதான் என்று இப்பாட்டில் வெளியிடுகிறார்: ஆழ்வார் திருவாய்மொழி பாடவல்லவர், எம்பெருமானையும் வசப்படுத்தவல்லவர் இத்யாதியாகவுள்ள அவருடைய புகழ்களை நான் ஏத்துகிறவனல்லன்; பாவங்கள் கூடுபூரித்துக்கிடந்த அடியேனைப் பரமபரிசுத்தனாக்கி ஆட்கொண்ட பெருமை யாதொன்றுண்டு. இதற்குமேல் வேறொருபெருமை ஆழ்வார்க்கு இருப்பதாக நான் நினைக்கவில்லை, அந்தப் பெருமையையே நாடெங்குமறியப் பறையடிக்கின்றேனென்கிறார்.

கண்டுகொண்டு என்றவிடத்தில் கொண்டு என்பது துணைவினையன்று; கண்டு என்றும் கொண்டு என்றும் இரண்டும் தனித்தனி வினையெச்சங்கள். என்னைக் கடாக்ஷித்து, என்னுடைய துர்க்கதியே பற்றாசாக என்னை அங்கீகரித்தருளி என்றபடி. "இருந்தான் கண்டுகொண்டு எனதேழை நெஞ்சாளும்" என்று ஆழ்வார் பகவத்விஷயத்திலே அநுஸந்தித்தவாற்றை இவர் ஆழ்வார்விஷயத்திலே அநுஸந்திக்கிறார்.

காரி மாறன்—ஆழ்வாருடைய திருத்தகப்பனார்க்குப் பொற்காரியார் என்று திருநாமம். ஆழ்வார் உலகநடைக்கு மாறாயிருந்ததால் மாறன் எனத்திருநாமம் பெற்றார். மாறன் பிரான், மாறப்பிரான்; "சில விகாரமா முயர்திணை" (நன்னூல்).

பண்டை வல்வினையாவது—பகவச்சேஷத்வத்துக்கு எல்லைநிலம் பாகவதசேஷத்வமென்று அறியப்பெறாமை. பாகவதவிஷயத்தை விலக்கிப் பகவானளவிலே பண்ணும் பக்தியைப் பாபமென்றிறே நம் ஆசாரியர்கள் அருளிச்செய்வது. "ஸா[illegible] — பரந்தேந ததாகதஃ" என்றவிடத்து அகஃ என்பதற்கு வியாக்கியானம் ஸேவிக்க.

பாற்றி—பாறச்செய்து; பாறுதல் உருமாய்த்தொழிதல்: பாறு என்ற வினைப்பகுதியடியாய் பிறந்து பிறவினையில்வந்த வினையெச்சம்.

அறியவியம்புகேன்—"அறியச்சொன்னவாயிரம்" என்று ஆழ்வார் உலகமறியத் திருவாய்மொழி சொன்னாப்போலே நான் உலகமறிய அவரது அருளைச் சொல்லுகிறேனென்கிறார். "தமிழ்ச்சடகோபன்" என்றது தமிழையே நிரூபகமாகவுடைய ஆழ்வார் என்றபடி. (எ)

அருள்கொண்டாடுமடியவரின்புற *
அருளினனவ்வருமறையின்பொருள் *
அருள்கொண்டாயிரமின்றமிழ்பாடினான் *
அருள்கண்டீரிவ்வுலகினில்மிக்கதே.

| | | | |
|---|---|---|---|
| அருள் கொண்டாடும் | பகவத் க்ருபையைக் கொண்டாடுகின்ற | இன் தமிழ் | இனிய தமிழ்ப்பாஷையிலே அமைந்த |
| அடியவர் | பக்தர்கள் | ஆயிரம் | திருவாய்மொழியாயிரத்தை |
| இன்புற | ஆநந்திக்கும்படி | பாடினான் | பாடினவருமான ஆழ்வாருடைய |
| அ அரு மறையின் பொருள் | அந்த அருமையான வேதத்தின் உட்பொருள்களை | அருள் கண்டீர் | க்ருபை ஒன்றுமாத்திரமன்றோ |
| அருளினன் | அருளிச்செய்தவராயும் | இ உலகினில் | இந்த லோகத்திலே |
| அருள் கொண்டு | பரமக்ருபையாலே | மிக்கது | அதிசயித்திருக்கிறது. |

எம்பெருமானது அருளைக்காட்டிலும் ஆழ்வாருளே சீரியதென்கிறார். "கலைகளும் வேதமும் நீதிநூலும் கற்பமுஞ் சொற்பொருள்தானும் மற்றை நிலைகளும் வானவர்க்கும் பிறர்க்கும் நீர்மையினாலருள் செய்தான்" என்றபடி ஸகல வேதவேதாங்க நூல்களையும் ப்ரஸாதித்தருளின எம்பெருமானுடைய க்ருபைக்கு மேற்பட உலகில் வேறொரு க்ருபையுண்டோ? என்று அந்த பகவத் க்ருபையிலேயே ஈடுபட்டிருந்த பாகவதர்கள், ஆழ்வார் திருவாய்மொழி அருளிச்செய்தபின்னர் 'ஹா! ஹா!! இவ்வளவு இனிமையான திவ்யப்ரபந்தம் போன்ற ஒரு நூலையும் இதுவரை ஈச்வரன் நமக்கு உபகரிக்கவில்லை; இன்றளவும் ஈச்வரனுக்கு மேற்பட்ட க்ருபாளு யாருமில்லையென்று நாம் மயங்கிக் கிடந்தோம், * பாலேய்தமிழரிசைகாரர் பத்தர் பரவுமாயிரத்தை அருளிச்செய்த ஆழ்வாருடைய திருவருளுக்கு நிகரான அருளும் இனி உலகிலுண்டோ? என்று வியந்து மகிழ்ந்தனராம்; அதனை யருளிச்செய்கிறார்-இந்த முதலடியில்.

திருவாய்மொழியில், "என்னுதனகனென்னும் நன்முனிவரின்பந்தலைச் சிறப்பப், பண்ணார்பாடலின் கவிகள் யானாய்த் தன்னைத்தான்பாடி" என்றவிடத்து அருளிச்செய்யும் அர்த்த விசேஷத்தை இங்கு அநுஸந்திக்க; அதாவது-திருவாய்மொழி அவதரிப்பதற்கு முன்பு முனிவர்களனைவரும் என்ன நினைத்திருந்தார்களென்றால்; எம்பெருமானுக்கு அபரிச்சிந்நமான ஸ்வரூப ரூபகுண விபூதிகள் இருக்கின்றன; இவற்றையெல்லாம் உள்ளபடி வர்ணிப்பதாகத் தொடங்கின வேதங்கள் வர்ணிக்கமுடியாமல் "யதோ வாசோ நிவர்த்தந்தே" என்னும்படி பின்வாங்கிவிட்டன; அக்குறைதீர அந்த பகவத்விபூதிகளை அதிவிசதமாக வர்ணிக்கவல்ல ஒரு ப்ரபந்தம் அவதரிக்கவேணும்; அத்தகைய பிரபந்தத்தை எம்பெருமான் எந்த மஹாநுபாவரைக்கொண்டு அவதரிப்பிக்கப்போகிறானோ' என்று சிந்தித்திருந்தார்கள்;

னைத்ததென்னவென்
திருவாய்மொழி அவதரித்தவுடனே அவர்கள் மீண்டும் நினைத்ததென்னவென்
றால் 'ஐயோ! எம்பெருமானுக்கு இன்னுஞ் சில குணங்களும், இன்னுஞ் சில
விபூதிகளும், இன்னுஞ் சில அவதாரங்களும் இல்லாமற்போயிற்றே!' என்று
வருந்தினராம்.

[அருளினன் அவ்வருமறையின் பொருள்.] வேதார்த்தங்களை ஆழ்வார் அரு
ளிச்செய்தாரென்றால், 'வேதத்தை மொழி பெயர்த்தாரா? அல்லது தாக்குத்
தொகையாக வேத தாத்பரியங்களை எடுத்துரைத்தாரா?' என்று விகற்பித்துக்
கொண்டு வேதத்தில் ஒரு பஞ்சாதியினுடைய அர்த்தமும் திருவாய்மொழியின்
ஒருபாட்டிலும் ஆநுபூர்வியாகக் காணப்படாமையால் மொழிபெயர்த்தாரென்ன
முடியாது; இனி, தாற்பரியமுரைத்தாரென்னில்; அதுவும் பொருந்தாது;
எங்ஙனேயெனில்; வேதம் கர்மகாண்டமென்றும் ப்ரஹ்மகாண்டமென்றும்
இரண்டுபாகமாக வகுக்கப்பட்டுளது; அவற்றுள் கர்மகாண்டத்தின் தாற்பரியம்
ஒரு பாட்டிலும் காணமுடியாது; ப்ரஹ்மகாண்டத்தின் தாற்பரியமும் உப
நிஷத்துகளிற் சொல்லுகிற பத்ததி வேறு; திருவாய்மொழியிற் சொல்லுகிற
வழி வேறு; அதற்கும் இதற்கும் யாதொரு ஸம்பந்தமுமில்லை; ஆதலால்
'வேதந் தமிழ் செய்தனரென்கை எவ்விதத்திலும் கூடாது' என்று சில பாமரர்
மறுத்துக்கூறுவர்; இதைப்பற்றி நாம் "த்ராவிட வேத ரஹஸ்ய ஸர்வஸ்வம்"
என்னும் க்ரந்தத்திலே பரக்கச் சொல்லியிருக்கிறோம். இங்கே சுருங்கச் சொல்லு
கிறோம். வேதந் தமிழ் செய்தார் என்பதற்கு வேதத்தின் தாற்பரியங்களை
ஐயந்திரிபற அழகாக விளக்கிக்காட்டினர் என்பது கருத்தாம். வேதத்தின்
உண்மைப் பொருளறியாதார் பலர் "தமேவ கேசித் வ்யாஸ ஹ்ஸ்வந்தி—
தத்ரைவ கேசித் சபலாச் சலபீபவந்தி" என்றபடி வேதவாக்கியங்களுக்கு அபார்த்
தங்கள் பண்ணி, 'ப்ரபஞ்சமே முழுப்பொய்' என்பதும் 'ஈச்வரனே கிடையாது'
என்பதும், 'ஈச்வரன் மாயாதிரோஹித ஸ்வஸ்வரூபனாய்த் தானே ஸம்ஸரிக்
கிறான்' என்பதும், 'மூலப்ரக்ருத்யாதிகளே ஜகத்காரணம்' என்பதும், 'தேவ
தாந்தரங்களே பரதைவம்' என்பதும், 'ஸ்ரீமந்நாராயணனுக்கு குணமில்லை,
விக்ரஹமில்லை, விபூதியில்லை' என்பதுமாய் இப்படி வேதங்களை ரஸாபாஸப்
படுத்தி அலைத்துவிட்டபடியால் அந்த வேதங்களின் உண்மைப் பொருளைக்
கையிலங்கு நெல்லிக்கனியாகக் காட்டவல்ல திருவாய்மொழியும் அதற்கு
அங்கோபாங்கங்களான மற்றுமுள்ள திவ்யப்ரபந்தங்களும் வேதரஹஸ்யமாக
வும் வேதோபப்ரும்ஹணமாகவும் சொல்லப்படுகின்றன. ஸ்ரீதேசிகனும்
"பொய்கை முனி.....மங்கையர்கோன் என்றிவர்கள் மகிழ்ந்து பாடும், செய்ய
தமிழ்மாலைகள் நாந்தெளிய வோதித் தெளியாத மறைநிலங்கள் தெளிகின்
றோமே" என்ற பாட்டால் இக்கருத்தை விளக்கியருளினர். "பாஷ்யகாரர்
இதுகொண்டு ஸூத்ர வாக்யங்களொருங்கவிடுவர்" என்பது ஆசார்யஹ்ரு
தயம். அழகியமணவாளஜீயர் அருளிச்செய்த ஐககண்ட்ய க்ரந்தமும் நோக்
கத்தக்கது. நிற்க.

அருளினன் என்பதும், பாடினன் என்பதும்-வினையாலணையும் பெயர்கள் ஆறும் வேற்றுமைத் தொகையும்

இவ்வுலகினில் என்பதை ஏழாம் வேற்றுமையாகக் கொள்வதிலும் ஐந்தாம் வேற்றுமையாகக் கொண்டு, ஆழ்வாருடைய அருள் இந்த லோகத்திற் காட்டிலும் பெரிது என்றுரைப்பதும் ஒக்கும்.

“பெரிதுபெரிது புவனம்பெரிது
புவனமோ நான்முகன் செய்தபடைப்பு
நான்முகன் கரியமாலுந்தியில் வந்தோன்
கரியமா லலைகடலிடையில் துயில்வோன்
அலைகடல் குறுமுனி கையிலடக்கம்
குறுமுனியோவெனிற் கலசப்பிறவியோன்
கலசமோ புவிதனிற் கண்டதோர் சிறுமண்
புவியோஅரவினுக் கொருதலைப்பாரம்
அரவோ உமையவள் சிறுவிரல்மோதிரம்
உமையோ சிவபிரான் பாகத்தொடுக்கம்
சிவனோ திருமால் திருவடியொடுக்கம்
திருமால் தொண்டர்த முள்ளத்தொடுக்கம்
தொண்டருட் பெரியோர் தூயசடகோபர்
சடகோபரருள் சகத்தினும் பெரிதே.”

என்றார் ஒரு பாகவத கவிவரர்.

அன்றி, இவ்வுலகிலே என்று ஏழாம் வேற்றுமையாகவே கொண்டு, “அருள் கண்டீரிவ்வுலகினில் மிக்கதே” என்ற சொல்லமைப்பு நயத்திற்கேற்ப ‘பாசுரம் மிக்கது பரமபதத்திலே, அருள் மிக்கது இவ்வுலகத்திலே’ என்றுரைப்பதும் சிறக்கும். அதாவது-“கேட்டாரார் வானவர்கள் செவிக்கினிய செஞ்சொல்லே” என்றபடி-திருவாய்மொழியை நித்யஸூரிகள் விசேஷமாக ஆதரிப்பதனால் திருவாய்மொழியின் பெருமை பரமபதத்தில் ஓங்குகின்றது; அத்திருவாய்மொழியை அருளிச்செய்வதற் குறுப்பான ஆழ்வாருடைய அருள் மாத்திரமே இவ்வுலகில் நிலாவுகின்றது என்றபடி. .... .... (அ)

மிக்கவேதியர் வேதத்தினுட்பொருள் *
நிற்கப்பாடியென் நெஞ்சுள்நிறுத்தினன் *
தக்கசீர்ச்சடகோப னென்நம்பிக்கு * ஆட்
புக்ககாதலடிமைப் பயனன்றே. (கூ)

# கூ. மிக்கவேதியர்.

| | | | |
|---|---|---|---|
| மிக்க வேதியர் வேதத்தின் | சிறந்த வைதிகர்களால் ஓதப்படுகின்ற வேதத்தினுடைய | நக்க சீர் | அருமையான குணங்களை யுடையராய் |
| உள் பொருள் | உள்ளுறை பொருளான து | சடகோபன் | சடகோபனென்ற திரு நாமத்தை யுடையரான |
| நிற்க | நிலை நிற்கும்படி | என் நம்பிக்கு | (அந்த) ஆழ்வார் விஷயத்திலே |
| பாடி | (திருவாய்மொழியைப்) பாடி | ஆள்புக்க | அடிமை செய்வதற்கு உரிப்பான |
| என் நெஞ்சுள் | என்னுடைய ஹ்ருதயத்திலே | காதல் | ஆசையான து |
| | | அன்றே | அந்த க்ஷணத்திலேயே |
| நிறுத்தினன் | (அந்த வேதார்த்தங்களை அல்லது திருவாய்மொழியை) ஸுப்ரதிஷ்டிதமாக்கி யருளினர் (ஆழ்வார்); | அடிமைப் பயன் | (ஆழ்வார் திருவடிகளில்) கைங்கரியம் செய்வதையே பயனாகவுடைத்தாய்த்து. |

கருங்கல்லைத் துளைத்துக் குழியாக்கி அதிலே நீரைத் தேக்குவாரைப் போலே அதிமந்தமான என் நெஞ்சிலே வேதாந்த விழுப்பொருள்கள் நன்கு பதியும்படி திருவாய்மொழியை அருளிச்செய்த ஆழ்வார் திறத்திலே அடிமை செய்ய வேணுமென்று நான் ஆசைப்பட்டது அந்த க்ஷணத்திலேயே பல பர்யவஸாயியாயிற்று! என்று தாம் பெற்ற பேற்றின் பெருமையைப் புகழு கிறார். ஆழ்வார் பகவத் விஷயத்திலே ஆழங்காற்பட்டு "இனியாமுறாமை" என்று ப்ரார்த்தித்தவுடனே அவர்க்கு அவ்வபேக்ஷிதம் தலைக்கட்டவில்லை; நெடுகாள் கழித்தே "உற்றேனுகந்து பணிசெய்து உனபாதம் பெற்றேன்" என்றும் "அவாவற்று வீடுபெற்ற" என்றும் சொல்லும்படி மநோரதஸித்தி யில் விளம்பமாயிற்று; இம்மதுரகவிகளுக்கோ அப்படியில்லை. இவர் ஆழ்வார் திருவடிகளில் சேஷபூதராகப்பெற்ற க்ஷணமும், இவ்வாழ்வார்க்கே நித்யகைங் கரியம் பண்ணவேணுமென்று மநோரதித்தக்ஷணமும் அந்த மநோரதம் ஈடேறப் பெற்று நித்யகைங்கரியம் வாய்த்தக்ஷணமும் ஆகிய இம்மூன்று க்ஷணமும் ஒரேக்ஷணமாய்த்து இவர்க்கு; இடையிற் சிறிது விளம்பமும் இல்லை என்னு மிதனால், பகவத் ப்ராவண்யத்திற்காட்டில் பாகவத ப்ராவண்யத்திற்குள்ள ஏற்றம் சொல்லிற்றாயிற்று. "கோளரியை வேறாக வேத்தியிருப்பாரை வெல் லுமே மற்றவரைச் சாத்தியிருப்பார் தவம்" என்றார் திருமழிசைப்பிரானும்.

மிக்க என்ற அடைமொழி வேதத்துக்குமாகலாம், வேதியர்க்குமாகலாம். வேதத்துக்கு ஆகும்போது "சுடர்மிகு சுருதியுள்" என்றபடி ப்ரமாணங்களில் தலைநின்ற வேதம் என்றபடி. வேதியர்க்கு ஆகும்போது, அல்பச்ருதரன்றிக்கே பஹுச்ருதராய் வேதத்தை வஞ்சிக்கவில்லாத பரமைகாந்திகள் என்றபடி.

வேதியர் வேதம் என்றது—வைதிகர்களால் ஓதப்பட்டு அதுவே காரணமாக சாகாபேதங்களையும் காடகம் காண்வம் தைத்திரீயம் இத்யாதி நாம பேதங்களை யும் அடைந்த வேதமென்றபடி. வேதியர்களுடைய வேதம் என்று ஆறும் வேற்றுமைத்தொகை: "ஓதுவாரோத்தெல்லாம்" என்ற திருவாய்மொழிப்

பாசுரத்திற் போல. ‘ உட்பொருள் ’ என்று பிரித்து, வேதத்தின் ஸூக்ஷ்மமான பொருள் என்றுமுரைப்ப.

“ வேதத்தினுட் பொருள்நிற்கப்பாடி ” என்பதற்குப் பரமரஸமாக ஓர்த்த முண்டு. அதாவது “ வேதப்பொருளே ! என் வேங்கடவா !! ” என்றபடி வேதத்தினுட்பொருள்–ஸாக்ஷாத் ஸர்வேச்வரன் ; அவன் நிற்கப்பாடி என்றது சில குதர்க்கிகள் மறைகுலையச் சாதசனங்களடங்க நடுங்கத் தருக்கச் செருக் காலே எம்பெருமானுடைய பரத்வத்தை இல்லை செய்தவளவிலே, எம்பெருமான் அதுகண்டு “ நானும் நானும் நசானும் ” என்றாற்போலே ‘ நான் பரதத்வமல் லேன் ’ என்று பிற்காலித்து ஓடப்புக, ஆழ்வார் * ஒன்றும் தேவாகிற மாலவட் டியையிட்டு அவ்வெம்பெருமானுகிற மத்தகஜத்தை ஓடவொட்டாதே நிலை நிறுத்திப் பரத்வஸ்தாபநம் பண்ணினமையைக் கூறியவாறு. இக்கருத்து ஆழ்வா ருடைய “ பராங்குசன் ” என்ற திருநாமத்திலும் தோற்றும் ; பர—பரமபுருஷ னுக்கு, அங்குசன்–மாவட்டி போன்றவன். “ வலக்கையாழி யிடக்கைச் சங்க மிவையுடை மால்வண்ணனை, மலக்கு நாவுடையேற்கு ” என்ற திருவாய்மொழி யிலும் இக்கருத்து உறையுமாறு காண்க.

ஆட்புக்ககாதல்=புக்க என்னும் பெயரெச்சம் காரியப்பொருளதாய், ஆள் புகுவதற்குக் காரணமான காதல் என்றதாம் : ‘ நோய்தீர்ந்த மருந்து ’ ‘ நின்னைக் காணும் அவா ’ என்ற விடங்களிற்போல.

அடிமைப்பயன் என்றது – அடிமையைப்பயனாக வுடையதென்று பொருள் படுதலால் அன்மொழித்தொகை. அன்றே என்றது – “ அன்றெனக்கிளவி ஆமெனத்தருமே ” என்றபடி ஆம் என்னும்பொருளதாக உரைத்தலுமொன்று.

ஆழ்வார்திறத்தில் சேஷத்வம் முற்படக் காதலை [கைங்கர்ய ருசியை] விளைத்து உடனே கைங்கர்யரூப புருஷார்த்த ஸித்தியில் மூட்டிவிடும் என்பது நான்காமடிக்குத் தேர்ந்த பொருள். ... ... ... (௬)

பயனன்றாகிலும் பாங்கலராகிலும் *
செயல்நன்றாகத் திருத்திப்பணிகொள்வான் *
குயில்நின்றார்பொழில்சூழ் குருகூர்நம்பி *
முயல்கின்றேனுன்றன் மொய்கழற்கன்பையே. (௭)

| | | | |
|---|---|---|---|
| பயன் அன்று ஆகிலும் | (பிறர் திருந்துவதால்) தமக்கொரு பயனில் லாமற் போனாலும் | செயல் | தமது அநுஷ்டானத்தாலே |
| | | நன்றாக திருத்தி | நன்றாக சிக்ஷித்து |
| பாங்கு அலர் ஆகிலும் | (அவர்கள் திருந்துகைக்குப்) பாங்காக அமையாமற் போனாலும் | பணி கொள்வான் | (அவர்களை) ஆட்கொள்வதற்காக |

† திருவாய்மொழி நாலாம்பத்தில் “ ஒன்றுந்தேவும் ” என்ற திருவாய்மொழி பரத்வ ஸ்தாபகமாதல் அறிக.

| | | | |
|---|---|---|---|
| குயில் நின்று ஆல் பொழில் சூழ் குருகூர் | குயில்களானவை நின்று ஆரவாரஞ் செய்யப் பெற்ற சோலைகளாலே சூழப்பட்ட திருநகரியிலே (எழுந்தருளியிருக்கிற) | உன்தன் | தேவரீருடைய |
| | | மொய் கழற்கு | சிறந்த திருவடிகளில் |
| | | அன்பையே | அன்பு உண்டாவதைக் குறித்தே |
| நம்பி! | ஆழ்வாரே! | முயல்கின்றேன் | முயற்சி செய்கின்றேன். |

ஆசார்யர்கள், அநுவ்ருத்தி ப்ரஸந்நாசார்யரென்றும் க்ருபாமாத்ர ப்ரஸந்நாசார்யரென்றும் இருவகைப்படுவர். சிஷ்யன் பலகாலும் அநுவர்த்தித்தால் பின்பு அருள்புரிந்து அந்த ஶிஷ்யனை அநுக்ரஹிப்பவர்கள் அநுவ்ருத்தி ப்ரஸந்நாசார்யர் எனப்படுவர்; திருக்கோட்டியூர் நம்பி போல்வார். எம்பெருமானார், கோயிலுக்கும் திருக்கோட்டியூர்க்கும் பதினெட்டு தடவை நடந்து வருந்தின பின்புதானே திருக்கோட்டியூர்நம்பி ப்ரஸந்நராயருளினார். அங்ஙனன்றியே, ஒருவன் அநுவர்த்தியாவிடினும் அதற்குமேல் விமுகனுமாயிருந்தாலும் முலைக் கடுப்பாலே தரையிலே பீச்சுவாரைப்போலே அவனை அநுக்ரஹிப்பதைத் தம் பேறாக நினைந்துத் தாங்களே அவனைப்பலகாலும் அநுவர்த்தித்துத் திருத்திப் பணிகொள்ளுமாசிரியர் க்ருபாமாத்ர ப்ரஸந்நாசார்யரெனப்படுவர்; எம்பெருமானார், பட்டர், நம்பிள்ளை போல்வார். அப்படிப்பட்ட ஆசார்யத்வபூர்த்தியை மதுரகவிகள் நம்மாழ்வார் திறத்திலே ஸ்வாநுபவத்தாற் கண்டறிந்தவராதலால் அக்குணத்திலே ஈடுபட்டுப் பேசுகிறார். "தாய்க்கும் மகனுக்கும் தம்பிக்கும் இவர்க்கும் இவரடி பணிந்தவர்க்குமே இவையுள்ளது" [ஆசார்யஹ்ருதயம் - ௯-வது ப்ரகரணம்.] என்ற ஸ்ரீஸூக்தியின் பொருள் இங்கு அநுஸந்திக்கத் தக்கது. [தாய்—ஸீதை; மகன்—ப்ரஹ்லாதன்; தம்பி—விபீஷணன்; இவர்—நம்மாழ்வார்; இவரடிபணிந்தவர்—எம்பெருமானார்.]

உலகத்திலே ஸமாந்யமாக ஒருவன் ஒருவனுக்கு ஒருதவி செய்வது ஒரு கைம்மாறுபெறக் கருதியேயாம்; ஆழ்வார் தம்முடைய அநுக்ரஹத்துக்கு ஒருவனை இலக்காக்குவது அங்ஙன் ஒரு பயனைக் கருதியன்று; கருதினாலும் அவனால் ஒருபயனும் பெறுவிக்கவும் முடியாது. அப்படிப்பட்ட நிஷ்பல ஜந்துவையாய்த்து ஆழ்வார் அநுக்ரஹிப்பது என்கிற அர்த்தம் பயனன்றாகிலும் என்பதில் அடங்கியுள்ளது. பாங்கலராகிலும் என்றது - அநதிகாரிகளாகிலும் என்றபடி. பழுதே பலபகலும் போக்கித்திரியும் ஸம்ஸாரிகளைத் திருத்துவதற்கென்றே திருவவதரித்த ஆழ்வார் இந்த வணங்காமுடி ஸம்ஸாரிகளோடு மாரடித்துக்கொள்ள இருப்பது "ஆராலுமாதாலுஞ் செய்ய, அகலிடத்தை ஆராய்ந்து அது திருத்தலாவதே?" [பெரிய திருவந்தாதி.] என்று வெறுத்துக் கைவாங்கினாலும் பின்னையும் அவர்களை விடமாட்டாதே "சொன்னால் விரோத" மித்யாதிகளாலே பல்லாயிரமுறை உபதேசித்துத் திருத்தப்பார்த்தது இவருடைய க்ருபாமாத்ர ப்ரஸந்நாசார்யத்வத்தை நன்கு விளக்கவற்றன்றோ.

பணிகோள்வான் என்பதை வான்விகுதி பெற்ற எதிர்கால வினையெச்சமாகக்கொண்டு, 'திருத்திப் பணிகொள்வதற்காக' என்று உரைத்தோம்: இவ்வினையெச்சம் எவ்வினையைக்கொண்டு முடிகின்றதென்னில்; குருகூர்நம்பி என்றதற்குக் 'குருகூரிலே எழுந்தருளியிருக்கிற நம்பி' என்று பொருளாதலால் 'எழுந்தருளியிருக்கிற' என்று வருவிக்கப்பட்ட பெயரெச்சத்தின் பகுதியான எழுந்தருளும் வினையைக்கொண்டு முடியுமென்க. அன்றி, நம்பி என்னும் பெயர், நம்பு என்னும் வினையடியாய்ப் பிறந்ததாதலால் அவ்வினையைக்கொண்டு முடியுமென்பதும் சாலப்பொருத்தமுடைத்தாம். "நம்பும் மேவும் நசையாகும்மே." திருத்திப் பணிகொள்வதற்காகத் திருக்குருகூரை மேவியிருப்பவரென்கை. இனி, 'பணிகொள்வான்' என்பதை வினையாலணையும் பெயராகக்கொண்டு, பணிகொள்பவனான குருகூர்நம்பி என்று இயைத்தால் குற்றமென்? என்று கேட்பீர்; கேண்மின்: இங்கு நம்பி! என்பது அண்மைவிளி; முதல் வேற்றுமையன்று; ஆகவே முன்னிலையாதலால் அதற்கேற்பப் 'பணி கோள்வாய்' என்று இருந்தால் நன்கு பொருந்தும்; கொள்வான் என்று படர்க்கையாயிருத்தலால் சிறிது வருத்தப்பட்டுப் பொருத்தவேணுமே.

"குயில்நின்று ஆர் பொழில்சூழ்" என்றும் ஓதுவர்.

"அன்பை முயல்கின்றேன்" = நீர்செய்த மஹோபகாரத்துக்கு நான் அநுரூபமாகச் செய்வதொரு ப்ரத்யுபகாரமில்லையாயினும் தேவரீருடைய திருவடிகளில் பரிபூர்ணமான அன்பையாவது அமைக்கலாம்; அதுவுமில்லை; 'ஆழ்வார் திருவடிகளில் அன்புவைக்கவேணும் அன்புவைக்கவேணும்' என்கிற யோசனையும் முயற்சியுமாயேயிருக்கிறதேயன்றி முற்றின அன்பு அமைந்திலது என்றபடி. ... ... ... ... ... (ய)

அன்பன்றன்னை யடைந்தவர்கட்கெல்லாம்
அன்பன் * தென்குருகூர்நகர்நம்பிக்கு *
அன்பனாய் மதுரகவி சொன்னசொல்
நம்புவார்பதி * வைகுந்தம்காண்மினே. (கக)

| | |
|---|---|
| அன்பன் தன்னை | ஆச்ரித பக்ஷபாதியான எம்பெருமானை |
| அடைந்தவர்கட்கு எல்லாம் | ஆச்ரயித்தவர்களான ஸகல பாகவதர் பக்கலிலும் |
| அன்பன் | பக்தியையுடையரான |
| தென்குருகூர் நகர் நம்பிக்கு | நம்மாழ்வார் விஷயத்திலே |
| அன்பன் ஆய் | பக்தனாயிருந்துகொண்டு |
| மதுரகவி சொன்ன சொல் | மதுரகவி அருளிச்செய்த இத்திவ்யப் பிரபந்தத்தை |
| நம்புவார் | (அங்களுக்குத் தஞ்சமாக) விச்வஸித்திருப்பவர்களுக்கு |
| பதி | வாஸஸ்தானமாவது |
| வைகுந்தம் காண்மின் | பரமபதமாம். |

நம்மாழ்வார் விஷயத்திலே பரமபக்தி பரீவாஹமாக வெளிவந்த இக்கண்ணிநுண் சிறுத்தாம்பை மஹாவிச்வாஸத்துடன் ஓதவல்லவர்கள் பரமபதத்திலே போய் ஆழ்வார் திருவடிநிழலிலே வாழப்பெறுவர் என்று பலச்ருதியோடே பிரபந்தத்தை நிகமநஞ் செய்தருளினர்.

"அன்பன்தன்னை அடைந்தவர்கட்கெல்லா மன்பன்" என்னுமிவ் வடைமொழி ஆழ்வார்க்குமாகலாம், மதுரகவிகளுக்குமாகலாம். ஆழ்வார்க்கு ஆகும்போது—"பயிலுந் திருவுடையார் யவரேனுமவர் கண்டீர்" என்றபடி சாதி ஒழுக்கம் முதலியவற்றின் ஆராய்ச்சியின்றியே பகவத் பக்திமாத்திரத்தையே பற்றாசாகக்கொண்டு ஸகல பாகவதரிடத்தும் அன்புமிக்க ஆழ்வார் என்றதாகிறது. மதுரகவிகளுக்கு அந்வயித்தால்-பாகவதரெல்லாரளவிலும் வைத்திருந்த அன்பை ஆழ்வாரொருவரளவிலே மடுத்த மதுரகவி என்று கருத்தாகக்கடவது.

[வைகுந்தங் காண்மினே.] ஆழ்வாரே உத்தேச்யமாகில் ஆழ்வார் திருநகரியன்றோ பதியாகவேணும்; பரமபதத்தைப் பதியாகச் சொல்லுவானேன்? என்னில்; (நம்பிள்ளையீடு.) "திருநகரியில் ஆழ்வாராணையும் பொலிந்துநின்றபிரானாணையும் இருபுரியாயாய்த்துச் செல்லுவது; அங்ஙனன்றியே ஆழ்வாராணையே செல்லும் தேசம் பரமபதமேயிறே: 'அடியார் நிலாநின்ற வைகுந்தம்' என்றும், 'வானவர் நாடு' என்றுஞ் சொல்லக்கடவதிறே—இத்தால் ஆழ்வார் ஏகபோக ஸாம்ராஜ்யமாக ஆளுகிற பரமபதமே ஆழ்வாரடியார்கட்கு வஸ்தவ்யதேசமாக விதிக்கத்தகு மென்றதாயிற்று.

இங்ஙனன்றியே, வைகுந்தமென்று தனியே ஒரு தேச விசேஷத்தைச் சொன்னபடியன்று; ஆழ்வாரெழுந்தருளி யிருக்குமிட மெதுவோ அதுதான் வைகுந்தம் என்பராம் நம்பி திருவழுதிவளநாடு தாஸர். "ஓராயிரத்துளிப் பத்தும் உரைக்க வல்லார்க்கு வைகுந்தமாகுந் தம்மூரெல்லாம்" (திருவாய்மொழி.) என்றதிறே.

கூரத்தாழ்வான் திருக்குமாரர் பட்டர் திருவவதரித்தபின்பு விண்ணுலகென்றும் மண்ணுலகென்றும் ஒருவாசியின்றி இடைச்சுவர் தள்ளி இரண்டு விபூதியும் ஒரு போகியாய்த்து என்று நம்பிள்ளை கோஷ்டியில் பலகாலும் ப்ரஸக்தமாமென்பது இங்கு அறியத்தக்கது.

[மதுரகவி.] ஆசுகவி, சித்ரகவி, விஸ்தாரகவி, மதுரகவி என்று கவிகள் நால்வகைப்படுவர்; அவர்களுள் இவர் இனிமையாகப் பாடுபவரென்பதுபற்றி மதுரகவியென்று திருநாமம் பெற்றார். இவருடைய பிரபந்தம் ஆழ்வார்களருளிச்செயலோடு சேர்ந்து திவ்யப்ரபந்தமென்ற சிறப்புப்பெயரைப் பெற்றாற்போல இம்மதுரகவிகளும் ஆழ்வார் கோஷ்டியிற் சேர்ந்து மதுரகவியாழ்வார் என்று ஆழ்வார்ப்பட்டம் பெற்றமை உபதேசரத்தினமாலையில் தோன்றும்.

"ஆழ்வார் திருமகளாராண்டாள் மதுரகவியாழ்வார் எதிராசராமிவர்கள்" என்றும், "பாரில் மதியாருமாண்டாள் மதுரகவியாழ்வார் எதிராசர் தோன்றிய ஊரிங்கு" என்றுமுள்ள பாசுரங்களை நோக்குக. ஆழ்வார்களிற் சிலரைக் குலசேகரப்பெருமாள், பாண்பெருமாள் என்பதுபோல மதுரகவிப்பெருமாள் என்றருளுவர்; "மன்றே புகழுந் திருவழுந்தூர் வள்ளல் மாறனைமுன்சென்றே மதுரகவிப்பெருமாள்" [சடகோபரந்தாதி] என்றார் கம்பநாடர். ... *

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

மதுரகவியாழ்வார் திருவடிகளே சரணம்.

பெருமாள்கோயில் பிரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசாரியர் ஸ்வாமி அருளிச்செய்த
திவ்யப்ரபந்த திவ்யார்த்த தீபிகையில்
கண்ணிநுண் சிறுத்தாம்பு உரை.
முற்றுப்பெற்றது.

முதலாயிரவுரை முற்றுப்பெற்றது.



# முதலாயிர அடைவு.


| | | பாசுரம். |
|---|---|---|
| 1. | திருப்பல்லாண்டு. | ... 12 |
| 2. | பெரியாழ்வார் திருமொழி | |
| | முதற்பத்து. | |
| 1. | வண்ணமாடங்கள் | ... 10 |
| 2. | சீதக்கடல் | ... 21 |
| 3. | மாணிக்கங்கட்டி | ... 10 |
| 4. | தன்முகத்துச்சுட்டி | ... 10 |
| 5. | உய்யவுலகு | ... 11 |
| 6. | மாணிக்கக்கிண்கிணி | ... 11 |
| 7. | தொடர்சங்கிலிகை | ... 11 |
| 8. | பொன்னியற்கிண்கிணி | ... 11 |
| 9. | வட்டுநடுவே | ... 10 |
| | இரண்டாம்பத்து. | |
| 1. | மெச்சூது | ... 10 |
| 2 | அரவணையாய் | ... 11 |
| 3 | போய்ப்பாடு | ... 13 |
| 4. | வெண்ணெயளைந்த | ... 10 |
| 5. | பின்னைமணாளனை | ... 10 |
| 6. | வேலிக்கோல்வெட்டி | ... 10 |
| 7. | ஆநிரைமேய்க்க | ... 10 |
| 8 | இந்திரனோடு | ... 10 |
| 9. | வெண்ணெய் விழுங்கி | ... 11 |
| 10. | ஆற்றிலிருந்து | ... 10 |
| | மூன்றாம்பத்து. | |
| 1. | தன்னேராயிரம் | ... 11 |
| 2. | அஞ்சனவண்ணனை | ... 10 |
| 3. | சீலைக்குதம்பை | ... 10 |
| 4. | தழைகளுந் தொங்கலும் | ... 10 |
| 5. | அட்டுக்குவிசோறு | ... 11 |
| 6. | நாவலம் பெரிய | ... 11 |
| 7. | ஐயபுழுதி | ... 11 |
| 8. | நல்லதோர் தாமரை | ... 10 |
| 9. | என்னாதன் தேவிக்கு | ... 11 |
| 10. | நெறிந்த கருங்குழல் | ... 10 |
| | நான்காம்பத்து. | |
| 1. | கதிராயிரம் | ... 10 |
| 2. | அலம்பாவெருட்டா | ... 11 |
| 3. | உருப்பிணிநங்கை. | ... 11 |
| 4. | நாவகாரியம் | ... 11 |
| 5. | ஆசைவாய்ச்சென்ற | ... 10 |
| 6. | காசுங்கறையுடை | ... 10 |
| 7. | தங்கையைமூக்கும் | ... 11 |
| 8. | மாதவத்தோன் | ... 10 |
| 9. | மரவடியை | ... 11 |
| 10. | துப்புடையாரை | ... 10 |
| | ஐந்தாம்பத்து. | |
| 1. | வாக்குத்தூய்மை | ... 10 |
| 2. | நெய்க்குடத்தை | ... 10 |
| 3. | துக்கச்சுழலை | ... 10 |
| 4. | சென்னியோங்கு | ... 11 |
| | ஆக | ... 473 |
| 3. | திருப்பாவை | ... 30 |
| 4. | நாச்சியார் திருமொழி. | |
| 1. | தையொருதிங்கள் | ... 10 |
| 2. | நாமமாயிரம் | ... 10 |
| 3. | கோழியழைப்பதன் | ... 10 |
| 4 | தெள்ளியார்பலர் | ... 11 |
| 5. | மன்னுபெரும்புகழ் | ... 11 |
| 6. | வாரணமாயிரம் | ... 11 |
| 7. | கருப்பூரம் | ... 10 |
| 8. | விண்ணீலமேலாப்பு | ... 10 |
| 9. | சிந்துரச்செம்பொடி | ... 10 |
| 10. | கார்க்கோடல்பூக்காள் | ... 10 |
| 11. | தாமுகக்கும் | .... 10 |
| 12. | மற்றிருந்தீர்கட்கு | .... 10 |
| 13. | கண்ணனென்னும் | ... 10 |
| 14. | பட்டிமேய்ந்தோர் | ... 10 |
| | ஆக | ... 143 |
| 5. | பெருமாள் திருமொழி. | |
| 1. | இருளிரிய | .... 11 |
| 2. | தேட்டருந்திறல் | ... 10 |
| 3. | மெய்யில்வாழ்க்கை | ... 9 |
| 4. | ஊனேறு செல்வம் | ... 11 |
| 5. | தருதுயரம் தடாயேல் | ... 10 |
| 6. | ஏர்மலர்ப்பூங்குழல் | ... 10 |
| 7. | ஆலைநீள்கரும்பு | ... 11 |
| 8. | மன்னுபுகழ் | ... 11 |
| 9. | வன்றாளினிணை | ... 11 |
| 10. | அங்கணெடுமதிள் | ... 11 |
| | ஆக | ... 105 |
| 6. | திருச்சந்தவிருத்தம் | ... 120 |
| 7. | திருமாலை | ... 45 |
| 8. | திருப்பள்ளியெழுச்சி | ... 10 |
| 9. | அமலனாதிபிரான் | ... 10 |
| 10. | கண்ணிநுண்சிறுத்தாம்பு | 11 |
| | ஆக மொத்தம் | ... 947 |